# கல்கி

ஆனந்த, தை, 6 — ஜனவரி, 19, 1976

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




## அடுத்த இதழில்...

இவ்விதழ் மேலட்டை: மனம் திறந்து பேசி மகிழும் வேளை
கதவம் திறந்து காத்திருக்கும் காரிகை

வண்ணப் படம்: சரஸ்வதி சந்திரமூர்த்தி.



போட்டிக் கதை: பிராயச்சித்தம்
அன்புமணி



காந்திஜி இந்தியாவுக்குத் தேவை

ஸ்ரீமந் நாராயண் வழங்கும் சிறப்புக் கட்டுரை

ராமேசுவரம் கும்பாபிஷேகம்: ஸ்தலத்துக்குச் சென்றுள்ள நமது விசேஷ நிருபர் தரும் தகவல்கள். • படங்கள்



# சில துண்டுக் காகிதங்கள்... தூக்கியெறிய முடியாதவை.

காரணம்...அவற்றிலே காவியங்கள் புதைந்திருக்கும். அதோடு, இன்றைய காகிதப் பஞ்சத்தில், ஒவ்வொரு துண்டுக் காகிதமும் ஒரு கோடி பெறும்.

ஆந்திரப் பிரதேஷ் பேப்பர் மில்லில், நாங்கள் ரீம் கணக்கில் காகிதம் தயார் செய்கிறோம்... எழுத, அச்சடிக்க, பொருட்களைப் பொதிந்து கட்ட என்று. ஆயின், அது எந்த மூலைக்கு? எங்கள் உற்பத்தியைப் பெருக்குவதற்காக, ஒரு குறுகிய காலத் திட்டம் வகுத்துக் கொண்டு, அசுர கதியில் அதிகப்படி வேலை செய்து வருகிறோம்.

ஓரளவு காகிதப் பஞ்சத்தைக் குறைக்க இது உதவும்—மகிழ்ச்சியான செய்தியில்லையா இது? காகிதம் இல்லாத வாழ்வில் வேடிக்கையும் விளையாட்டும் ஏது?



ஆந்திரப் பிரதேஷ் பேப்பர்

mcm/app/17 tam

ரெஜிஸ்டர்டு ஆபீஸ் & மில்ஸ்: ராஜமுந்திரி (ஆ.பி.) பம்பாய் ஆபீஸ்: ஸ்ரீனிவாஸ் ஹவுஸ், ஹஸாரிமால் ஸோமானி மார்க்
ஹைதராபாத் ஆபீஸ்: 1-2-33/2, மதுபன், ககன்மஹல் ரோடு.

ஏகபோக விற்பனையாளர்: ப்ளேனிட் லிமிடெட், 24, லிங்கி செட்டித் தெரு, மதராஸ்-1.

# பிரதமருக்கு அழகல்ல!

கல்கி

மலர் 34

இதழ் 26



மிச்ரா அவர்களின் மரணம் பாரத சரித்திரத்தில் வெட்கப் படுவதற்குரிய ஓர் அத்தியாயமாக அமையும். இத்தகைய காட்டு மிராண்டிகளை உடைய சமூகம் என்பதால் மக்களுக்குத் தலை குனிவு. இதுபோன்ற பயங்கரவாதிகளைக் கண்காணிக்காமல் உலவவிட்டதால் அரசுக்கு அவமானம்.

மிச்ரா அவர்களிடம் எத்தனையோ குறைகளைப் பலர் கண்டனர். இல்லாமலா பாராளுமன்றத்தில் லைசென்ஸ் ஊழலில் அவரைச் சம்பந்தப்படுத்தி அண்மையில் அங்கத்தினர்கள் தாக்குத் தாக்கென்று தாக்கினார்கள்? ஆயினும் அவரிடம் சில சிறப்பியல்புகள் இல்லாமல் போகவில்லை. முக்கியமாக ரயில்வே வேலைநிறுத்தத்தின் போது அவர் நாட்டு நலனை உத்தேசித்து அசாதாரண மன உறுதியுடன் பிடிவாதமாக இருந்து வந்தார். இதனை நாட்டுப் பொருளாதாரத்தின் பலவீன நிலையை உணர்ந்தவர் பாராட்டினர்.

லஞ்ச ஊழலுக்குப் பேர் போன பீகார் அரசையும் அதற்குப் பக்கபலமாக இருக்கும் இந்திரா ஆட்சியையும் பதவியிலிருந்து நீக்க ஜெயப்பிரகாசர் சாத்துவிக எதிர்ப்பு இயக்கம் நடத்தி வரும் சூழலில் மிச்ரா வெடிகுண்டுக்கு இரையாகி மாண்டது பலவிதமான வதந்திகளுக்கு இடம் தந்திருக்கிறது. அந்த வதந்தித் தீயில் மண்ணெண்ணெயை ஊற்றுவதுபோல் இந்திரா பேசியிருப்பது ஒரு பிரதமருக்கு அழகல்ல.

சாத்துவிக எதிர்ப்பு, போராட்டம் என்று ஆரம்பித்தாலும் மக்களைக் கட்டுப்படுத்தி வைக்கும் ஆற்றலைத் தலைவர்கள் முழுமையாகப் பெற முடியாமல் போகிறது; மக்கள் உணர்ச்சி வசப்பட்டு வன்முறைகளில் இறங்கிவிடுகிறார்கள் என்று பொதுப்படையாகப் பிரதமர் பேசியிருந்தால் அதை வரவேற்கலாம். ஜே. பி.யின் போராட்டம், போராட்டத்துக்கு இந்திரா காங்கிரஸ் — கம்யூனிஸ்டுகளின் கூட்டு எதிர்ப்பு என்று மாறி மாறி நடந்திருக்கும் சூழலில் மக்கள் உணர்ச்சிப் பிழம்பாகிவிடுகிறார்கள். இதைத் தவிர்க்கத் தலைவர்கள் முன்வருவது ரொம்ப நியாயம்.

ஆனால் இந்திராவோ ஜெயப்பிரகாசர் மீதும் அவர் இயக்கத்தின் மீதும் வெடிகுண்டு நிகழ்ச்சிக்கு நேரடியாகப் பழி சுமத்திப் பேசியிருக்கிறார். 'எனது இலக்கு மிச்ரா அல்ல' என்று ஜே.பி. கூறியது எந்தச் சந்தர்ப்பத்தில், எதற்காக, எந்த நோக்கில் என்பதொன்றையும் பாராமல் அதைத் திரித்துக் கூறிப் புது விளக்கம் கற்பித்திருக்கிறார் இந்திரா. 'ஆம்! அவர்கள் இலக்கு மிச்ரா அல்ல; இந்திராதான்! மிச்ராவின் மரணம் இந்திராவைக் கொல்ல நடந்த ஒத்திகை!' என்று கூறியிருக்கிறார். கிட்டத்தட்ட அழுகிற நிலைக்கே வந்துவிட்டாராம்! ரேடியோவில் இந்திராவின் குரலைக் கேட்டவர்கள் அவர் உணர்ச்சி வசப்பட்டிருப்பதை நன்கு உணர முடிந்தது.

நாட்டை நடத்திச் செல்லும் பெரும் பொறுப்பில் உள்ளவர்கள் உணர்ச்சி வசப்படக் கூடாது. யோசனையின்றி வார்த்தைகளைச் சிந்திவிடவும் கூடாது. திரும்பப் பெற முடியுமா உதிர்ந்த சொற்களை? இந்திரா அம்மையார் இம்மாதிரி ஜே.பி.யைச் சாடி இருப்பதைக் கேட்டு மக்கள் சிரிப்பார்கள். நல்ல நாடகம் என்று ரசிப்பார்கள்; அவ்வளவே!

மிச்ராவுக்கு மருத்துவ உதவி கிடைப்பதில் பெரும் குற்றம் என்று கருதத்தக்க அளவில் கால தாமதமாகியிருக்கிறது. இதில் ஏதோ உயர் மட்டத்தில் இருப்பவர்கள் சம்பந்தப்பட்ட சதி இருக்கிறது என்று ஏட்டிக்குப் போட்டியாகக் கூறிவிட முடியாதா என்ன?

ரயில்வே வேலைநிறுத்தத்தின் போது மிச்ராவின் பிடிவாதத்தால் கஷ்டநஷ்டங்களுக்கு உள்ளான சில ரயில்வே ஊழியர்களின் சதி வேலைதான் வெடிகுண்டு நிகழ்ச்சி என்ற முடிவுக்கே ஸி.பி.ஐ. விசாரணை நம்மைக் கொண்டு செல்கிறது என்பதை யார் மறந்தாலும் பிரதமர் மறந்தது ஆச்சரியம் மட்டுமல்ல; அநீதியும்கூட.

சாவுக்குப் பயந்தவளல்ல!
தேர்தல் தோல்விக்கு?



# பிரித்தாளும் சூழ்ச்சிக்குப் பலியாவதா?

ஜனசங்கம், ஸ்தாபன காங்கிரஸ், பாரதிய லோக தளம் ஆகியவற்றின் பொருளாதாரக் கொள்கைகளில் ஒற்றுமை நிரம்ப உண்டு. இந்திரா அரசின் தீவிர இடதுசாரி பொருளாதாரப் போக்குக்கு முற்றிலும் மாறுபட்டவை இவை. எனவே இந்த ஓர் அம்சத்திலேனும் இக்கட்சிகள் இணைந்து செயல்பட்டு மக்களுக்கு ஆரோக்கியமான மாற்று அரசை வழங்க முன்வர வேண்டும். தேர்தல் நெருங்குகிற நிலையில் இனியும் தாமதிப்பதற்கில்லை.

தேர்தல்கள் நடப்பதில் உள்ள குறைபாடுகள், ஒழுங்கீனங்களை விவாதித்து நல்லதொரு நடைமுறையை உருவாக்கலாம், இதற்குச் சர்வ கட்சி மகாநாடு நடத்தலாம் என்று பசப்பு வார்த்தைகளைக் கூறி வந்த இந்திரா அரசு இப்போது நழுவப் பார்க்கிறது. தேர்தல் மிகச் சமீபத்தில் நெருங்கிவிட்டதால் இப்போது மகாநாடுகள் நடத்த அவகாசமில்லை என்பதுபோல் கையை விரிக்கிறது.

எதிர்க் கட்சிகள் இதற்கு இடம் தரக்கூடாது. அவை இணைந்து தேர்தல் சீர்திருத்தங்களுக்கு வலுவாகக் குரல் எழுப்ப வேண்டும். ஒன்றுபட்டு எழுப்பும் குரலுக்குத்தான் மதிப்பும் சக்தியும் மிகுதி. தனித்தனியே எத்தனை புலம்பினாலும் பலன் இல்லை.

இந்திராவின் பிரித்தாளும் சூழ்ச்சிக்கு மீண்டும் பலியாகாதீர்கள் என்று எதிர்க்கட்சிகளைக் கேட்டுக் கொள்கிறோம்.

## மொழிபெயர்ப்புப் பாலம்

**"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்"**

என்று மகா கவி பாரதியார் நம் தமிழ் மொழி வளர்ச்சிக்கு வழிவகுத்துத் தந்தார்.

பிற நாடுகள் என்ன? உள் நாட்டிலேயே பல மொழி பேசும் மக்களிடையே பிறமொழி இலக்கியங்கள் பரவ வேண்டும். இந்தக் கருத்துப் பரிமாற்றம்தான் பாரதத்தை ஒரே நாடாக, பாரத மக்களை ஒரே மக்களாக விளங்கச் செய்யும்.



மொழிபெயர்ப்புப் பாலம் அமைக்கும் பணியில் "கல்கி" உதவி ஆசிரியர் திரு ரா. வீழிநாதன் பல்லாண்டுகளாக ஈடுபட்டு வியத்தகு சாதனைகள் புரிந்திருக்கிறார். ஹிந்தி, குஜராத்தி, உருது முதலிய வடபுலத்து மொழிகளிலிருந்து தமிழுக்கு அரும் இலக்கியக் கருவூலங்களைக் கொணர்ந்திருக்கிறார். அதேமாதிரி தமிழிலிருந்து ஹிந்தி மொழிக்குப் பல அருஞ்செல்வங்களை அளித்திருக்கிறார்.

ராஜாஜி, கல்கி, பி. எஸ். ராமையா, ரா. கணபதி போன்ற பலரது நூல்களையும் ஹிந்தி வடிவில் தந்திருக்கிறார்.

திரு ரா. வீ. அவர்களின் அரும் பெரும் பணியைப் பாராட்டி அகில உலக ஹிந்தி சம்மேளனம் நாகபுரியில் அவரைக் கௌரவிக்க முன் வந்திருக்கிறது. தமிழுக்கும் ஹிந்திக்கும் ஒருங்கே பெருமை அளிக்கும் காரியம். தன்னடக்கம் மிக்க திரு ரா. வீ. அவர்களைத் தன்னால் தேடி வந்த கௌரவத்தைக் கருதி வாழ்த்துகிறோம்.

## ஒரு ரன் வெற்றி!

ரஞ்சி கோப்பைக் கிரிக்கெட் பந்தயத்தில் தமிழ்நாடு ஆந்திராவிடம் தோல்வி அடைந்தது. ஒரு ரன் வித்தியாசத்தில் தோற்றோமே என்று துயரப்படுவதைவிட, ஒரு ரன் வித்தியாசத்தில் வெற்றி பெற்ற ஆந்திர சகோதரர்களின் சாதனையை எண்ணி மகிழ்ந்து மனப்பூர்வமாக வாழ்த்துவதே முறை.



ஒரு ரன் வித்தியாசத்தில்தானே தோற்றோம் என்று ஆறுதல் அடைவதற்குமில்லை. பதற்றமடையாமல் நிதானத்துடன் ஆடும் நல்ல பாட்ஸ்மன்கள் அண்மைக் காலத்தில் தமிழகத்தில் உருவாகவில்லை என்பதையே இந்த மாட்ச் உணர்த்துகிறது. நிலைமையைச் சீராக்கச் சிந்தனையும் முயற்சியும் தேவை. வெங்கடராகவனும் குமாரும் நிகழ்த்திய அற்புதங்களுக்கு ஏற்ப பாட்ஸ்மன்களும் ஒத்துழைத்திருந்தால் கதை வேறாக இருந்திருக்கும்.

வி. வி. குமார் இந்த மாட்சின்போது தமது ரஞ்சிக் கோப்பைப் பந்தய நானூறாவது விக்கெட்டை எடுத்துச் சரித்திரம் சமைத்திருக்கிறார். வாழ்த்துகிறோம்.

## முதியோர் இல்லம்

பெரியவர்களுக்கு இளம் தலைமுறையினர் ஒரு பிரச்னை என்றால் இளம் தலைமுறையினர்களுக்கு வயது முதிர்ந்தவர்கள் ஒரு பிரச்னையாவதும் உண்டு. அவர்கள் பல காரணங்களால் குடும்பத்திலுள்ள இளம் தலைமுறையினரோடு ஒன்றி வாழ முடிவதில்லை.

அப்படிப்பட்டவர்களுக்கு உதவத் தேசிய ஸ்திரீகள் கவுன்சிலின் தமிழ்நாட்டுக் கிளை முன்வந்திருக்கிறது. இத்திட்டத்துக்குச் சுந்தரம் மோட்டார்ஸ் நிறுவனத்தின் டைரக்டரான திரு ஆர். ரத்தினம் அவர்கள் தலைவராகவும், டாக்டர் விசாலாட்சி நெடுஞ்செழியன் உபதலைவராகவும் பொறுப்பேற்றிருக்கின்றனர். திருமதி ராதா பால் என்ற சுறுசுறுப்பான பெண்மணி செயலாளர்.

முதியவர்களுக்கு எல்லா வசதிகளும் கொண்ட மலிவான விடுதிகள் கட்டித் தரப் போகிறார்கள். அவ்விடுதிகளில் ஒட்டு மொத்தமாக ஒரு தொகையைக் கொடுத்து

விட்டு வாடகை இல்லாமல் தங்கள் ஆயுட் காலம் முழுவதும் வசிக்கலாம். அவர்களுக்குப் பிறகு அந்த விடுதி தேசியப் பெண்கள் கவுன்சிலின் உடைமையாகிவிடும். இந்தத் திட்டத்துக்குப் பல முதியவர்களிடமிருந்து ஆதரவுக் கடிதங்கள் வந்திருப்பதாக டாக்டர் விசாலாட்சி நெடுஞ்செழியன் கூறினார்.

## அ. சீ. ரா. மறைந்தார்

பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்களின் கருத்துச் செறிந்த இலக்கிய உரைகளைக் கேட்ட தமிழ்கூறும் நல்லுலகம் ஆற்ற மாட்டாத பெருந் துயரத்தில் ஆழ்ந்து போயிருக்கிறது. தமிழ், ஏன் என்று கேட்பாரற்றுக் கிடந்த நாளில், ஆங்கிலத்தில் பேச்சிலும், எழுத்திலும் பெரும் புலமை படைத்த அ. சீநிவாச ராகவன் கம்பனையும், வள்ளுவனையும், நாயன்மார்களையும், ஆழ்வார்களையும் மேற்கோள் காட்டித் தமிழ்ப் புலவர் உலகத்தையும், ஆங்கிலப் புலவர்கள் உலகத்தையும் பெரும் வியப்புக் கடலில் ஆழ்த்தினார். இவ்விதம் ரசிகமணி டி. கே. சி.யை அடுத்து அருந் தொண்டு புரிந்தார்.



நாணல் என்ற புனைபெயரில் பல அரிய கவிதைகள் யாத்தார். ''வெள்ளைப் பறவை'' என்னும் அவரது கவிதை நூலுக்கு சாகித்ய அகாடெமி பரிசளித்துக் கௌரவித்தது. அவரது அருமையான கவிதைகள், கட்டுரைகள், நாடகங்கள் பலவற்றைத் தாங்கி வரும் கௌரவம் கல்கிக்குக் கிடைத்து வந்தது.

தமிழ், தேனினும் இனியது என்பதனை அவரது வெண்கலக் குரல் வழியாக வெளிப்படும் பேச்சு கேட்போருக்கு ஒவ்வொரு கணமும் நிரூபித்து வந்தது. இனி அந்தக் குரலை எங்கே கேட்கப் போகிறோம்!

திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றத் தொடங்கிய அ. சீ. ரா. சென்னை விவேகானந்தா கல்லூரியில் சில காலம் பேராசிரியராக இருந்தார். பிறகு தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியின் முதல்வராகப் பல்லாண்டு திறமையாகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றார். தமிழ்நாடு சட்டமன்ற மேலவை அங்கத்தினராகவும் பதவிவகித்தார்.

பாரத நாட்டு அறிஞர்கள் குழாத்திடை பெருமதிப்புப் பெற்றுத் திகழ்ந்தார். ஆனால் அது அவரைக் கடுகளவும் ஆணவங்கொள்ளச் செய்யவில்லை. புகுமுக வகுப்பு மாணவனுடனும் சரிசமமாக, நகைச்சுவையும் இலக்கியச் சுவையும் மிளிர இனிமையாகப் பேசிப் பழகுவார். அத்தகைய சௌஜன்யத்தை யாரிடம் இனிக் காண்போம்!

## வாழைப்பழம் வாயில் விழுமா ?

அண்ணா நகரில் பொங்கல் சுற்றுலாக் கண்காட்சியை ஆரம்பித்து வைத்த முதல்வர், மத்திய அரசு மாமல்லபுரத்தில் ஓர் ஒளி, ஒலி காட்சியை உருவாக்கும் யோசனையைக் கைவிட்டுவிட்டது என்பதைச் சுட்டிக் காட்டியிருக்கிறார். முதல்வரின் ஆட்சேபணையுடன் நமது கண்டனத்தையும் சேர்த்துக்கொள்ளுகிறோம்.

இந்த ஒளி ஒலிக் காட்சியை முதலில் மதுரை மீனாட்சி கோவிலில் அமைப்பதாக இருந்தது. பக்தர்களின் ஆட்சேபணை காரணமாகத் திட்டம் கைவிடப்பட்டது. மாமல்லபுரத்தில் இத்தகைய ஏற்பாடு செய்வதில் சங்கடம் ஏதுமில்லை. மத்திய அரசு இந்த யோசனையை ஏற்றுக் கொண்டு பிறகு காரண காரியமின்றிக் கைவிட்டிருக்கிறது.

அயல்நாடுகளிலிருந்து வரும் சுற்றுலாப் பயணிகள் தாங்கள் தங்கும் ஓட்டலில் நடக்கும் காபரே நடனத்துடன் திருப்தி அடைய மாட்டார்கள். இந்த நாட்டின் தொன்மையான நாகரிகங்களைக் காணவே வருகிறார்கள். அவற்றைப் புதுமையான யுக்திகளுடன் அவர்களுக்குக் காண்பிப்பது மிகவும் அவசியம்.

டாலர்களும் ஸ்டர்லிங்குகளும், உரித்த வாழைப் பழமாகப் பாலில் தோய்ந்து வாயில் வந்து விழாது. அதற்குப் பாடுபட வேண்டும்.

ராஜாஜி சிந்தனை

## சோர்வு நீங்கட்டும்; தேசம் சோபிக்கட்டும்!

பர்மிட் லைசென்ஸுகளை வழங்க அறிஞர்கள் அடங்கிய கட்சிச் சார்பற்ற ஒரு சுதந்திரக் குழு நிறுவப்படவேண்டும். இதோடு மக்களுக்கு அரசு ஒரு வாக்குறுதியும் அளிக்கவேண்டும். அவர்கள் தங்கள் அறிவையும் ஆற்றலையும் கறுப்போ, வெளுப்போ தங்கள் சேமிப்பையும் தங்களைத் தாங்களே முன்னேற்றிக் கொள்ளப் பயன்படுத்தலாம்; அவர்கள் சம்பாத்தியத்தை அரசு அபரிமித வரிகளால் பறிமுதல் செய்து கொண்டு போகாது என்ற உறுதி மொழி தேவை.

இவை இரண்டும் ஏற்பட்டு விட்டால் மக்களின் சக்தி வெடித்துக் கொண்டு வெளிப்படும். தொழிலகங்களில் முதலீடு பெருகும். இதன் விளைவாக வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்கும். மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும். சேரிகளில் 'வேலை கிடைக்குமா ? கடன் தீருமா ?' என்று காத்துக் கொண்டிருப்பவர்களின் வாழ்வு மலரும். சில நகரங்களில் மட்டுமின்றி நாடெங்கும் சிறிய சிறிய தொழிற்பேட்டைகள் தோன்றும். கறுப்புப்பணம் எல்லாம் தடையின்றி வெளிப்பட்டு முதலீடாகும். அரசும் கிடைக்கும் லாபத்தில் தனக்குரிய பங்கைப் பெறலாம். தேசத்தின் சோர்வு நீங்கி நம்பிக்கையுடன் கூடிய உழைப்பு எங்கும் நிலவும்.

சுயராஜ்யா, ஜனவரி 25, 1964

தாக்கெர்ஸி கலைவண்ணக்
கேம்ப்ரிக் துணி
...காலத்தை
வெல்லும் அணி

ப்ளீச், பிரிண்ட், டை,
''ஸான்ஃபோரைஸ''
மற்றும் ''மெர்ஸரைஸ்''
''செய்யப்பட்டவை''.




தாக்கெர்ஸி
க்ரூப் ஆஃப மில்ஸ்

ஹிந்துஸ்தான் மில்ஸ் • கிரௌன் மில்ஸ்

வார் இத்தல்தாஸ் சேம்பர்ஸ், 16, பாம்பே ஸமாசார் மார்க், பம்பாய்-400 023

Madison/TGM/1 74 A TM

புதிய கன்டெய்னர்
உயர்ந்த தரம்
மனம் கவரும்
நறுமணம




பண்டைய வழக்கப்படி
உங்களின்
விருப்பத்திற்கு ஒரு
புதிய தோற்றம

# மலாய்

## சாண்டல் டால்க்

சந்தனக் கட்டையின் நறுமணம் மனத்தைக் கவருவது தொன்று தொட்டு வருவது. மலாய் சாண்டல் டால்க்கின் பட்டுபோன்ற வழவழப்பான தன்மை உங்களுக்கு கலப்படமற்ற அதைத் திரட்டித் தருகிறது.

இப்போது உங்களின் விருப்பமான டால்க் முன்னைவிடக் கவர்ச்சிகரமானதும்கூட - ஒரு பிரத்தியேகமான சிறந்த கன்டெய்னரில்.

கல்கத்தா கெமிக்கலின் ஒரு தரமான தயாரிப்பு

விநியோகஸ்தர்கள் : சிவராம் & ஸ்வாமி, சென்னை



# எனக்குக் கனகதாரை ③

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்

'மூக பஞ்சசதீ'யில் இல்லாதது இல்லை. காவிய ரஸம் என்று எடுத்துக்கொண்டால் அத்தனையும் இதில் இருக்கிறது. பக்தி பூரணமாக இருக்கிறது. ஞானம் இருக்கிறது. வித்வத் இருக்கிறது. மந்திர சாஸ்திரம், தந்திர சாஸ்திரம், இவையும் இருக்கின்றன. இவை எல்லாவற்றுக்கும் மேலாக, இவை எல்லாவற்றுக்கும் காரணமான அம்பிகையின் அநுக்கிரக விசேஷம் ததும்பி வழிகிறது. இந்த ஐந்நூறு ஸ்லோகங்களிலும் அம்பிகையின் வாக்கிலிருந்து (வாயிலிருந்து) மூகன் வாக்குக்கு அநுக்கிரகம் பாய்ந்தது. அந்த வாக்கிலிருந்து வந்த ஸ்லோகங்களை நம் வாயால் சொன்னால் அவை திரும்பவும் நம்மை அந்த அநுக்கிரகத்திலேயே கொண்டு போய் அமிழ்த்துகின்றன.

மூகனின் வாக்கில் அம்பாளின் பரமாநுக்கிரகமான மேதை பூரித்து நிற்கிறது. மேதை, வாக் விலாசம் இரண்டையும் அம்பாள் மூகனுக்கு வர்ஷித்திருக்கிறாள். அந்த வாக்கில் ஒன்று, காமாக்ஷி அம்பிகை கனகதாரை வர்ஷித்ததைப் பற்றியும் சொல்கிறது. 'ஸ்துதி சதக'த்தில் இந்த ஸ்லோகம் வருகிறது.

நமக்கெல்லாம் ஒரே காரியத்தை — அது எத்தனை உசத்தியா யிருந்தாலும் — விடாமல் செய்து கொண்டிருந்தால் அதிலே ஓர் அலுப்பு சோம்பல் வரத்தான் செய்யும். அம்பாளோ கொஞ்சம் கூடச் சோம்பலே இல்லாமல் ஒரே காரியத்தைச் செய்து கொண்டிருக்கிறாள் என்கிறது ஸ்லோகம். அதென்ன காரியம் என்றால் அவளது பாதத்தை அண்டி வருகிறவர்களின் இயல்பான தோஷங்களை அகற்றி, அவர்களிடத்தில் நல்ல அறிவுப் பிரகாசத்தை, மேதையை, பிரதிபை என்கிற செல்வத்தைத் தருவதுதான். இந்த நல்லறிவே பெரிய சம்பத்து. "ப்ராதிப ஸ்ரீ" என்கிறார் கவி. 'ஸ்ரீ' என்றால் லக்ஷ்மி. அறிவு என்கிற லக்ஷ்மியை மட்டும்தான் அவள் வழங்குகிறாள் என்றில்லை. பொருள் வடிவத்திலும் இந்தத் தொண்டை மண்டலத்தில் ஸ்வர்ண வர்ஷத்தை அவள் பொழிந்திருக்கிறாள் என்கிறார். ஆதொண்டைக் கொடி என்பதை அடையாளமாகக் கொண்ட சீமைக்குத் தொண்டை மண்டலம் என்று பெயர். வடக்குப் பக்கத்தில் ஸ்ரீகாளஹஸ்திக்குப் பக்கத்தில் இருக்கிறது ஸ்வர்ணமுகி (தமிழில் 'பொன்முகலி') ஆறு. இந்தப் பெயரிலேயே ஸ்வர்ணம் இருக்கிறது. தெற்கே பெண்ணையாறு — 'பிநாகினி' என்பது 'பெண்ணை' என்றாகி விட்டது. பரமேச்வரன் தன்னுடைய வில்லாகிய பிநாகத்தால் பூமியைக் கீறி உண்டாக்கிய நதி என்று புராணம். கிழக்கே மஹோததி என்கிற வங்காள விரிகுடா (Bay of Bengal). மேற்கே வடார்க்காடு ஜில்லாவில் அப்பைய தீக்ஷிதர் அவதரித்த விரிஞ்சிபுரத்துக்குப் பக்கத்தில் இருக்கிற ஒரு மகா பெரிய மடு — இந்த நாலு எல்லைக்குள் இருக்கிற தேசத்துக்குத் தொண்டை மண்டலம் என்று பெயர். இதைத் 'துண்டீரம்' என்று ஸம்ஸ்கிருதத்தில் ஸ்லோகம் சொல்கிறது.

'தொண்டை மண்டலம் சான்றோர் உடைத்து' என்ற புகழ் படைத்தது. 'வையம் பெறினும் பொய் உரையார்' என்று இந்தச் சீமை மக்களைப் புகழேந்திப் புலவர் புகழுகிறார். நல்லறிவு, எனவே சத்தியம், இந்தச் சீமைவாசிகளின் முக்கிய லட்சணம். 'சத்ய விரத க்ஷேத்திரம்' என்றே ஸங்கல்பம் செய்யும்போது காஞ்சீபுரத்தைச் சொல்லுகிறோம். அசோக சாஸனத்தில் (edict) பரத கண்டத்தின் தெற்குக் கோடியைச் சொல்கிறபோது மலையாள ராஜாவைக் 'கேரள புத்த' என்றும், மதுரை ராஜாவைப் 'பாண்டிய புத்த' என்றும் சொல்லி, அதோடு 'சத்திய புத்த' என்றும் ஒன்றைச் சொல்லியிருக்கிறதே, அது இந்தத் தொண்டை மண்டல ராஜாவைத்தான் என்பது என் ஊகம். இப்படிக் காமாட்சியின் அருளால் நல்லறிவை, சத்தியத்தை விசேஷமாகப் பெற்ற தேசத்தில் ஒரு முறை பெரிய பஞ்சம் வந்து விட்டது.

பஞ்சம் ஏன் வருகிறது? மழை இல்லாததால். மழை ஏன் பெய்யாமல் போகிறது? அதே சமுத்திரம், அதே சூரியன், அதே மாதிரி பூமியின் சுழற்சி எல்லாம்தான் ஒவ்வொரு வருஷமும் இருக்கிறது. அப்படியானால், ஒரே மாதிரி சமுத்திரம் வற்றி, மேகங்கள் உண்டாகி, பூமியின் சுழற்சியில் பருவக் காற்றுகளால் தள்ளப்பட, வருஷா வருஷம் ஒரே ரீதியில்தான் மழை பெய்ய வேண்டும். மழையும் பெய்யத்தான் செய்கிறது. ஆனால் சில சமயங்களில் அது நாட்டில், நதிகள் தோன்றுகிற மலை உச்சிகளில் பெய்யாமல் கொஞ்சம் திசை தப்பி, எங்கோ பாலைவனத்தில் அல்லது சமுத்திரத்திலேயே கொட்டித் தீர்த்து விடுகிறது. உடனே பஞ்சம் வந்துவிடுகிறது. லோக வியவகாரங்களை எல்லாம் நிர்வகிக்கிற பரம கருணாமூர்த்தியான ஓர் அம்பாள் இருக்கிறபோது ஏன் இப்படி ஆகிறது என்றால், இதுவும் அவள் காரியம்தான். கருணாமூர்த்தியானவள் நியாயாதிபதியாகவும் நடக்க வேண்டியிருக்கிறது. ஜனங்கள் ரொம்பவும் ஒழுங்கு தப்பிப் போகிறபோது அவர்களைத் தண்டிக்க வேண்டியிருக்கிறது. இதனால்தான் ஜனங்கள் செய்கிற பாவம் ரொம்பவும் அதிகமாகிறபோது பஞ்சத்தை உண்டாக்குகிறாள்.

நல்ல புத்தி வாய்ந்த தொண்டை மண்டலவாசிகளும் எப்போதோ ஒரு சமயம் ஒழுங்கு தப்பிப்போனார்கள். அவர்களுக்கு மேதையை, உயர்ந்த அறிவை மறுபடியும் உண்டாக்குவதற்கு முன்னால் கொஞ்சம் தண்டனையாக இப்படிப் பஞ்சம் வந்தது. (தொடரும்)



■ சித்தார்த்தா - நடிகர்களும் தயாரிப்பாளரும்.

கீழே: ஜெர்மனிக் குடியரசு அனுப்பிய படத்தில் ஒரு காட்சி.






■ ஈரான் நாட்டுப் படம்.

# சாப்ளின் முதல் சித்தார்த்தா வரை!

தில்லி ஒரே கோலாகலமாக இருக்கிறது. பன்னிரண்டு திரை அரங்குகளில் தினமும் குறைந்தது மூன்று காட்சிகள் விதம் சர்வதேசத் திரைப்படங்கள் காட்டப்படுகின்றன. கிட்டத் தட்ட நூறு படங்கள் விழாவில் பங்கு பெறுகின்றன.

- விக்யான் பவனில் விழாவை அமைச்சர் குஜ்ரால் துவக்கி வைத்தார். ஒரு சினிமா காமிராவுக்கு வெற்றிலை பாக்கு, தேங்காயுடன் ஆரத்தி எடுத்தாள் நடிகை சிமி.
- அன்றைய தினம் சிமி நடித்த சித்தார்த்தா திரையிடப்பட்டது. சித்தார்த்தா படத்தைப் பற்றிக் கடந்த ஆண்டு பல பத்திரிகைகளில் வந்த

செய்திகள், சர்ச்சைகள், படங்கள் ஆகியவை காரணமாகப் படத்தைப் பார்க்க ஏகப்பட்ட கூட்டம். (சில திரையரங்குகளில் ஒருத்தருக்கு ஒரு டிக்கட்டுதான்—சித்தார்த்தா படத்துக்கு — என்று அறிவித்திருந்தார்கள்!) ஆனால் திரைப்படம் பெரும் ஏமாற்றமாக அமைந்து விட்டது. படம் சுமார்தான். சிமியின் பல ''முக்கிய'' காட்சிகளையும் தயாரிப்பாளர் நீக்கிவிட்டுத்தான் படத்தின் பிரதியை இந்தியாவுக்கு அனுப்பியிருந்தார். அந்த வகையிலும் ரசிகர்களுக்கு ஏமாற்றம்!

☐ ஆரம்ப விழாவுக்கு ஜெமினி, ஏவிஎம். ராஜன், சௌகார் ஜானகி ஆகியோர் வந்திருந்தனர். பளிச்சென்ற வெள்ளை வேட்டி சட்டையுடன் ராஜன் மேடையில் காட்சி அளித்தார். ஜீனத் அமன் கண்ணைப் பறிக்கும் ரத்தச் சிவப்பு சல்வார்—கமீஸ் உடையில் வந்தார். மனோஜ் குமார், ரிஷி, அமிதாப், பபிதா ஆகிய நட்சத்திரங்களும் வந்திருந்தார்கள்.

☐ அனைவரையும் தூக்கி அடிக்கும் அழகுடனும் ஜொலிப்புடனும் காட்சி அளித்தவர் இத்தாலிய நடிகை ஜீனா லோலோபிரிகிடா. அவருக்கு வயது 47 என்றார்கள். நேரில் பார்க்கும்போது இருபத்தைந்துக்கு மேல் மதிப்பிட முடியாது.

☐ அமெரிக்க டைரக்டர் ஃபிராங்க் காப்ரா (வயது 78!), சத்யஜித் ரே முதலியவர்கள் ஜூரர் குழுவில் உள்ளனர்.

☐ வழக்கம்போல் 'ஏ' படங்களுக்கு ஏகப்பட்ட கிராக்கி இருந்தது. பல 'ஏ' படங்கள் ''ஏ' மாற்றமாக அமைந்தன!

☐ 'ஏ கிளாக் வொர்க் ஆரஞ்ச்', 'காட்ஃபாதர்', 'அமர்கார்ட்' போன்ற படங்கள் ஏற்கனவே வெளிநாடுகளில் பிரபலமடைந்துள்ளவை. இந்தப்படங்களும் விழாவில் இடம் பெற்றுள்ளன.

☐ டிக்கட்டுகள் குறைந்த பட்சம் ஐந்து ரூபாய். ஆரம்ப நாளன்றே ஒருசில மணியில் எல்லாத் தியேட்டர்களிலும் எல்லா வகுப்பு சீசன் டிக்கட்டுகளும் விற்றுவிட்டன. ''ஐயோ, சீசன் டிக்கட்டு இவ்வளவு விலையா?'' என்ற கூக்குரல் ஒரு பக்கம் இருந்தபோதிலும், 105 ரூபாய் சீசன் டிக்கட்டுகள் கூடப் 'பிய்த்து'க் கொண்டு போய்விட்டன.

☐ ''நடிகையாக வரவில்லை. புகைப்படக்காரராக வந்திருக்கிறேன்'' என்றார் ஜீனா. ஒனாசிஸ், காஸ்ட்ரோ, கிஸிஞ்சர் போன்ற பல உலகப் பிரமுகர்களைப் படம் எடுத்துள்ள ஜீனா, பிரதமர் இந்திரா காந்தியையும் பல படங்கள் எடுத்தாராம். ''இந்திராவின் அழகு என்னைக் கவர்ந்து விட்டது'' என்கிறார் ஜீனா.

☐ 'இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை இத்தகைய விழாவை நடத்த உத்தேசம்' என்றார் குஜ்ரால், பத்திரிகையாளர் கூட்டத்தில். விழாவுக்குச் சுமார் எட்டு லட்ச ரூபாய் செலவாகிறது.

☐ கிழக்கு ஜெர்மனி அனுப்பியுள்ள படத்தின் பெயர்: ''கழுதையை எப்படிப் போஷிப்பது?''

☐ சார்லி நடித்த பல படங்களை 'சாப்ளின் ரிவ்யூ' என்ற பெயரில் விழாவில் திரையிடுகிறார்கள். சாப்ளின் நகைச்சுவை இன்றும் ஜீவனுடன் இருக்கிறது.

☐ 'கில்லோ கிஸ்ப்' என்ற பெல்ஜியப் படத்தில் நிறைய ஹிந்தி வசனங்கள் வருகின்றன. இது ஒரு கலையான அனுபவமாக இருக்கிறது, பட ரசிகர்களுக்கு. ஆப்கானிஸ்தானத்தைச் சேர்ந்த மூன்று மாலுமிகள் ஆன்ட்வொர்ப் நகரில் ஒரு பெண்ணைச் சந்திக்கப் போகிறார்கள். (அவர்கள் தங்களுக்குள் இந்தியில் பேசிக் கொள்கிறார்கள்.) பல இடங்களில் தேடியும் அந்தப் பெண் கிடைக்கவில்லை. இவ்வளவு பொடிக் கதையில் நிறையக் கவர்ச்சிக் காட்சிகளை அநாவசியமாகப் புகுத்தியிருக்கிறார்கள்!

☐ முதல் பரிசு பெறும் படத்துக்கு 'அசல்' 'தங்க மயில் பொம்மை' தரப்படுகிறது. 'கோல்டன் பீகாக் அல்ல; கோல்ட் பீகாக்' என்றார் அமைச்சர் குஜ்ரால்.

☐ எந்தப் படம் பரிசு பெறக் கூடும்? 'அமர்கார்ட்' அல்லது 'ஹௌ டேஸ்டி மை லிட்டில்—ஃபிரஞ்ச் மேன்' என்று சினிமா விமர்சகர்கள் பேசிக் கொள்கிறார்கள்.

**''நாராயணன்''**

# ‘டெபிலைஸ்ட்’

## துணிகளுக்கு ஒரு மகத்தான பலனைச் சேர்க்கிறது— சுருக்கம் விழாமலிருக்கின்றன

சுத்தமான பருத்தி துணிகளுக்கும் அல்லது காட்டன் சிந்தடிக் கலந்த துணிகளுக்கும் ‘‘டெபிலைஸ்ட்’’ ஒரு மகத்தான பலனைச் சேர்க்கிறது. சுருக்கம் விழாத தன்மைக்கென சோதிக்கப்பட்டது. உங்கள் துணிகளுக்கு மிகக் குறைவான இஸ்திரி செய்வதுடன் பார்ப்பதற்கும் மிக அழகாக உள்ளது.

‘‘டெபிலைஸ்ட்’’ எனும் வியாபாரச் சின்னம் உலகப் புகழ் பெறுவதுடன் இந்தியாவில் உள்ள முதன்மையான மில்களான அரவிந்த், பின்னி, டி ஸி எம், பாம்பே டையிங், ஸ்ரீ அம்பிகா தாகர்ஸே, மற்றும் டாட்டா, மபத்லால் தயாரிக்கும் தரமான துணிகளுடன் திகழ்கின்றது.

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு மீட்டர் துணியிலும் TEBILIZED® மார்க் இருக்கிறதா என்று பார்த்து வாங்கவும்




**TEBILIZED®** சுருக்கம் விழாத தன்மைக்கென சோதிக்கப்பட்டது.

® ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்கின் உரிமையாளர்கள்
**மேட்டூர் பியர்ட்செல் லிட்.**
தபால் பெட்டி எண், 7, சென்னை-1.

S&TA'S-MBT-190-TAM-A

# பேபி ஃபுட் பற்றாக்குறையிருந்தால் பாலமுல் உங்களுக்கு உதவ முடியும்

**பாட்டிலில் கொடுத்தல்**

குழந்தைக்கு மூன்று மாதம் ஆனதும், உணவு தயாரிக்கும் போது, பேபி ஃபுட்




ஒரு ஸ்பூனும், எளிதில் ஜீரணமாகும் பாலமுல் ஒரு ஸ்பூனுமாகக் கலந்து கொடுக்கத் தொடங்குங்கள். பிறகு படிப்படியாக அதிகமாக்கி, பேபி ஃபுட் பாதியும், பாலமுல் பாதியுமாகக் கொடுங்கள்.

**ஸ்பூனால் ஊட்டுதல்**

சிறிது பால் அல்லது நீருடன் பாலமுல் கலந்து பசைபோல் ஆக்குங்கள். சுவைக்கு வேண்டிச் சர்க்கரை சேருங்கள். காலையில் பாட்டிலில் கொடுப்பதற்குமுன்




இதை ஸ்பூனால் ஊட்டுங்கள். படிப்படியாய், ஒரு நாளைக்கு 2, 3 தடவைகளாக பாலமுலை, பழச்சாறு, பருப்பு, முட்டை, இவைகளோடு கொடுத்து, சுவைத்து இன்புறச் செய்யுங்கள்.

RADEUS/BA/TR

100 கிராம். அமுல்ஸ்ப்ரே, பாலமுல் இரண்டையும் உணவுச் சத்தில் ஒப்பிட்டுப் பாருங்கள்.

| | அமுல்ஸ்ப்ரே | பாலமுல் |
|---|---|---|
| புரதம் | 22.0 கிராம் | 22.0 கிராம் |
| கார்போஹைட்ரேட்ஸ் | 50.0 கிராம் | 60.0 கிராம் |
| கொழுப்பு | 18.0 கிராம் | 7.0 கிராம் |
| கால்ஷியம் | 1.0 கிராம் | 1.0 கிராம் |
| ஃபாஸ்ஃபரஸ் | 0.8 கிராம் | 0.8 கிராம் |
| இரும்புச் சத்து | 4.0 மி.கிராம் | 6.0 மி.கிராம் |
| வைட்டமின் A | 1500 இ.யு. | 1500 இ.யு. |
| வைட்டமின் D | 400 இ.யு. | 300 இ.யு. |
| வைட்டமின் $B_1$ | 0.6 மி.கிராம் | 0.5 மி.கிராம் |
| வைட்டமின் $B_2$ | 1.0 மி.கிராம் | 0.6 மி.கிராம் |
| வைட்டமின் $B_6$ | 0.3 மி.கிராம் | — |
| நியாஸினமைட் | 6.0 மி.கிராம் | 5.0 மி.கிராம் |
| வைட்டமின் C | 30.0 மி.கிராம் | 50.0 மி.கிராம் |

# பாலமுல்

பாலுடன் கூடிய தானிய உணவு
ஏறக்குறைய அமுல்ஸ்ப்ரே



கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாபரேடிவ் மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.

# லாட்டரி அழுகிறது!

நான் ஒரு லாட்டரி டிக்கெட். அதுவும் தமிழ் நாட்டு லாட்டரி டிக்கெட்.

நான் பிறந்து கிட்டத்தட்ட எழுபத்தொரு மாதங்கள் ஆகின்றன. ஆரம்ப காலத்தில் நான் பார்ப்பதற்கு மிக மிக அழகாக இருந்தேன். வழுவழுப்பான உயர்தரக் காகிதத்தில் மூவர்ணத்தில் அச்சிடப்பட்டேன். ஒரு சமயம் என்னை அழகுபடுத்துவதற்காக அரிசி, சர்க்கரை ரேஷன் கார்டுகள் அச்சிடுவதுகூடப் பல வாரங்கள் தாமதிக்கப் பட்டதாம்.

இப்போது நான் சோகை பிடித்தது போல் இருக்கிறேன். மட்ட ரகக் காகிதத்தில் வர்ணம் என்ற பெயரில் பூசி அச்சடிக்கிறார்கள்.

நான் இப்போது தயாரிக்கப்படும் நிலைமையில் வெளியில் சென்று நாலு பேரோடு பழகுவதற்கே அவமானமாக இருக்கிறது. நாங்கள் விற்கப்படும் இடத்தில் மேஜை மீது மற்ற ராஜ்ய லாட்டரி டிக்கெட்டுகள் மத்தியில் நான் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அமர்ந்திருக்கிறேன். ஏனென்றால், அவை



எல்லாம் நாளுக்கு நாள் அழகாக வளர்ந்து வருகின்றன.

என் அவமானம் அது மட்டுமா? மற்ற ராஜ்ய டிக்கெட்டுகள் அடிக்கடி ஐந்து லட்சம், பத்து லட்சம் முதல் பரிசுகள் அளித்து வருகின்றன. தமிழ்நாட்டில் வருடத்துக்கு ஒரு முறை அப்படிச் செய்தால் அதிகம்.

தவிர, உத்தரப் பிரதேசம், தில்லி, ஹரியானா, குஜராத் முதலிய மாகாணங்களில் மாதம் இரண்டு முறை சீட்டுக் குலுக்கிப் போடுகிறார்கள். ஒன்றுக்குப் பெரிய குலுக்கல் என்றும், மற்றொன்றுக்கு 'மினி குலுக்கல்' என்றும் பெயர். ஒரு ராஜ்யத்தில் வாரம்தோறும் கூடச் சீட்டுக் குலுக்கல் உண்டு.

இந்தியாவில் நாங்கள் தோன்றிய சென்ற ஐந்து வருட காலத்தில் சுமார் ஆயிரத்து இருநூறு லட்சாதிபதிகள் சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறார்கள். இவர்களுள் சென்ற ஆண்டுக்குப் பிறகு லட்சாதிபதி யானவர்கள் சிறிது அதிர்ஷ்டக் குறைவானவர்கள். ஏனென்றால் மத்திய அரசாங்கம் திடீரென்று அதிர்ஷ்டப் பரிசுத் தொகைக்கும் வருமான வரி மூன்றிலொரு பங்கு — வசூலிக்கத் தொடங்கி விட்டது.

நான் என் உருவத்தைப் பற்றி அவமானப்படுவதாகச் சொன்னேன் அல்லவா? வர வர எனக்கு வாழ்க்கையிலேயே வெறுப்புத் தோன்றி விட்டிருக்கிறது. நான் உயிர் வாழ வேண்டியது அவசியம் தானா என்று கூடத் தோன்றுகிறது. ஏன்? ஒரு கணக்குப் போட்டுப் பார்க்கலாமா?

தமிழ் நாட்டின் 76வது குலுக்கலுக்கு மொத்தப் பரிசுத் தொகை ரூ. 6,98,000. கிட்டதட்ட 7 லட்ச ரூபாய்.

7 லட்சம் ரூபாய்க்கு 7 லட்சம் டிக்கட்டுகள் மட்டும் விற்றால் போதாது. எங்களை விற்கும் ஏஜண்டுகளுக்கு நூற்றுக்குப் பதினைந்து விகிதம் கமிஷன் தரப்படுகிறது. மற்றும் பத்திரிகை விளம்பரத்துக்காகவும் அச்சடிக்கவும் நிர்வாகத்துக்காகவும் இன்னொரு பதினைந்து சத விகிதத்துக்கு மேல் செலவழிக்கும்படியிருக்கும். டிக்கட் விற்று வசூலிக்கும் தொகையில் மூன்றிலொரு பங்கு இப்படிப் போய் விடுகிறது.

ஆகவே 7 லட்சம் ரூபாய் பரிசு கொடுக்கப் பத்து லட்சம் ரூபாய் வசூலித்தாக வேண்டும். இதற்கு அதிகமாக வசூலாவதுதான் அரசுக்கு லாபம். எனவே சுமார் பன்னிரண்டு லட்சம் டிக்கட்டுகள் அச்சடிப்பார்கள். விற்காத டிக்கட்டுகள் வீண்.

என்னைப் பெரும்பாலும் ஏழைகளே வாங்குகிறார்கள்.





பல மாகாணங்களின் டிக்கெட்டுகளையும் வாங்குகின்றனர். பஸ் செலவும், பால் செலவும், அரிசிச் செலவும் மாதம் ரூ. 40 வரை அதிகரித்து விட்டிருக்கும் போது சாதாரண மக்களுக்கு ஒரு ரூபாய் பத்து ரூபாய்க்குச் சமமாகும்.

தமிழ் நாட்டில் குதிரைப் பந்தயம் ஒழிக்கப்பட்ட போது ராஜாஜி செய்யத் துணியாத காரியத்தைத் தாம் செய்து விட்டதாக முதல்வர் கூறினார். ராஜாஜி செய்யத் துணியாத எத்தனையோ காரியங்கள் உண்டு. அவர் லாட்டரி நடத்தவில்லை; மதுக் கடைகளைத் திறக்கவில்லை; இன்னும் எவ்வளவோ இருக்கலாம். பகுத்தறிவுக் கட்சி அரசாங்கம், 'அதிர்ஷ்டப் பரிசு' நடத்துவானேன்? ஏழைபாழைகளைத் துயரத்தில் ஆழ்த்துவானேன்?

ஆகவேதான் லாட்டரி டிக்கெட் ஆகிய நான் வாழ விரும்பவில்லை என்கிறேன்.

— அனுமதேயம்

# பாதுகாப்பிற்கு ஒரு பூட்டு உள்ளதெனில் அது நவ-தால் ஒன்றே ஒன்றுதான்!




நம்பிக்கையானது. அதனால்தான் பாங்குகளும் தொழிற்சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோகிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்பு முறையில் வெட்டப்பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற்கேற்ற முறையில் செய்யப்பட்டது நவ-தால். பித்தளை, எஃகினாலான இரட்டைக் கூடு அதை மிகமிக உறுதியாக்குகிறது. தயாரிப்பவர்கள்: கோத்ரெஜ்—பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்பதில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடையவர்கள்.

4 சைஸ்கள்:
40 mm (5 லீவர்கள்)
50 mm (6 லீவர்கள்)
65 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

# நவ-தால்

Godrej
கோத்ரெஜ்

எப்போதும் நங்கூரம் மார்க் பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

JLKA-GBNT-4 TAM

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

# சகோதரர்கள்

**பு**லிகேசியும் புத்தபிக்ஷுவும் ஒரே மனிதர்தான் என்று சிவகாமி எண்ணிக் கொண்டதில் வியப்பு ஒன்றுமில்லை. சற்று முன்னால், புலிகேசிச் சக்கரவர்த்தியே மேற்படி உருவ ஒற்றுமை காரணமாகத் திகைக்கும்படி நேர்ந்தது.

வாதாபிச் சக்கரவர்த்தி தம்முடைய கூடாரத்தில் தன்னந் தனியாக உட்கார்ந்திருந்தார். அவருடைய மனத்தில் பெருஞ் சோர்வு குடிகொண்டிருந்தது. வாதாபியிலிருந்து அவர் புறப்பட்ட போது என்னென்ன உத்தேசங்களுடன் கிளம்பினாரோ, அவை ஒன்றும் நிறைவேறவில்லை. எல்லாம் மகேந்திர ஜால பல்லவனுடைய தந்திரங்களினால் உருப்படாமற் போயின.

மகேந்திர பல்லவனுடைய தந்திரங்களுக்கு மாற்றுத் தந்திரங்கள் செய்து அவனைத் தோற்கடிக்கக் கூடிய சாமர்த்தியம் வாய்ந்தவரான நாக



நந்தி பிக்ஷுவைப் பற்றித் தகவலே கிடைக்கவில்லை.

இதனாலெல்லாம் புலிகேசி பெரிதும் உற்சாகம் குன்றியிருந்தார். அவருக்கிருந்த ஒரே ஓர் ஆறுதல், தளபதி சசாங்கன் மூலம் மகேந்திரபல்லவனுக்கு ஒரு பாடம் கற்பிக்க ஏற்பாடு செய்துவிட்டு வந்ததுதான். ஆ! அந்தப் பல்லவ நரி தன்னுடைய பொந்தை விட்டு வெளியே வந்து பார்க்கும்போது, வாதாபிப் புலிகேசியை வஞ்சித்து ஏமாற்றுவது எவ்வளவு பிசகான காரியம் என்பதைக் கொஞ்சம் தெரிந்து கொள்வான் அல்லவா ?

தளபதி சசாங்கன் தம்முடன் வந்து சேர்வதற்காகவே சக்கரவர்த்தி வட பெண்ணையின் வடகரையில் காத்துக் கொண்டிருந்தார். கட்டளையை நிறைவேற்றிவிட்டு வந்து சேரச் சசாங்கனுக்கு ஏன் இத்தனை நாள் பிடிக்கிறது என்று அவருக்குக் கோபம் வந்து கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் தெற்கேயிருந்து படை வருகிறது என்று கேட்டதும் சசாங்கன்தான் வருகிறான் என்று எண்ணி, அவன் கொண்டு வரும் செய்தியைக் கேட்பதற்காக மிக்க ஆவலுடன் இருந்தார். கூடாரத்துக்கு வெளியே குதிரை ஒன்று வந்து நின்றதும், சசாங்கன் இவ்வளவு தாமதமாய் வருவதற்காக அவன் மேல் எரிந்து விழுவதற்கு ஆயத்தமானார்.

ஆனால், உள்ளே பிரவேசித்து வந்தது சசாங்கன் அல்ல. கிரீடமும், வாகுவலயமும், சக்கரவர்த்திக்குரிய மற்ற ஆபரணங்களும் தரித்த நெடிதுயர்ந்த கம்பீர உருவம் ஒன்று வந்தது.

அதைப் பார்த்ததும் புலிகேசிக்கு ஏற்பட்ட திகைப்புக்கும் குழப்பத்துக்கும் எல்லையேயில்லை. 'இது என்ன ? எனக்குச் சித்தப்பிரமை பிடித்துவிட்டதா? அல்லது மாயக் கனவு காண்கிறேனா ? பின், ஆசனத்தில் இதோ சாய்ந்து உட்கார்ந்திருக்கும் நானே கூடாரத்துக்கு வெளியிலிருந்து எப்படி உள்ளே வர முடியும் ?' என்று திகைத்தார்.

புலிகேசியின் குழப்பத்தைப் பார்த்துவிட்டு வெளியிலிருந்து வந்த உருவம் புன்னகை புரிந்து, ''தம்பி! ஏன் இப்படிப் பயப்படுகிறாய்? நான் என்ன பேயா, பிசாசா, பூதமா ? உனக்கு என்னைத் தெரியவில்லையா ?'' என்று சொல்லிக் கொண்டே தலைக் கிரீடத்தை எடுத்ததும், பிக்ஷுவின் மொட்டைத் தலை காணப்பட்டது. உடனே புலிகேசி குதூகலத்துடன் துள்ளி எழுந்து, ''அண்ணா, நீயா ?'' என்று கட்டிக்





கொள்ளப் போனவர், மறுபடியும் திகைத்து நின்று, "ஆஹா! இதுஎன்ன வேஷம்? உன்னுடைய வாக்குறுதி.....?" என்று வினவினார். அப்போது புலிகேசியின் கண்களின் ஓரங்களில் பொருமையுடன்கூடிய குரோத ரேகை தென்பட்டது.

"தம்பி! அதற்குள்ளே அவசரமா? ஒரு சந்தர்ப்பத்தில் இந்த வேஷம் உன்னுடைய உயிரைக் காப்பாற்றுவதற்குப் பயன்பட்டதல்லவா? இப்போது என்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்கு இது பயன்பட்டது. என் வாக்குறுதிக்கு ஒரு பங்கமும் நேரவில்லை. உன்னுடைய சாம்ராஜ்யத்தில் நான் இந்த வேஷம் போட்டுக் கொள்வதில்லை என்றுதானே வாக்குறுதி கொடுத்தேன்? இன்னும் உன்னுடைய சாம்ராஜ்யத்துக்குள் நாம் வந்துவிடவில்லையே?" என்று நாகநந்தி சொன்னதும் புலிகேசி கொதிப்புடன் கூறினார்:

"ஆம்! ஆனால், இந்தப் பிரதேசம் இன்று நம்முடைய சாம்ராஜ்யத்துக்குள்வராதிருப்பது ஏன்? பல்லவ நாட்டில் இன்று வராகக் கொடி பறக்காதது ஏன்? அற்பத்திலும் அற்பமான மகேந்திர பல்லவனுடைய சைனியத்துக்கு முன்னால் வாதாபியின் மகா சைனியம் தோல்வி

அடைந்து திரும்பிப் போவது ஏன்? எல்லாம் உன்னால் வந்ததுதான்!''

''தம்பி! தோல்வி என்கிற வார்த்தையையே சொல்லாதே! யார் தோல்வி அடைந்தது? வாதாபி சைனியம் தோல்வி அடையவில்லை, நீயும் தோல்வி அடையவில்லை. அந்தத் தோல்வி என்னால் நேரவும் இல்லை. எல்லாம் சாவகாசமாகப் பேசுவோம். முதலில் உடனே காவி வஸ்திரம் இரண்டு தருவித்துக் கொடு. நான் இந்த வேஷத்தில் இருந்தால் வீண் குழப்பத்துக்கு இடமாகும். ஏற்கனவே, நான் வந்து கொண்டிருந்தபோது, வெளியில் நிற்கும் வீரர்கள் என்னை வெறித்து வெறித்துப் பார்த்தார்கள்!''



''ஆமாம்! அவர்கள் வெறித்துப் பார்ப்பதற்குக் காரணம் இருக்கிறதல்லவா? கூடாரத்துக்குள் இருந்த சக்கரவர்த்தி வெளியில் எப்போது, எப்படிப் போனார் என்று அவர்களுக்குத் திகைப்பாக இருந்திருக்காதா? எனக்கே கொஞ்ச நேரம் குழப்பமாய்ப் போய்விட்டதே!'' என்று புலிகேசி கூறிவிட்டுக் கூடாரத்தின் வாசலில் நின்ற காவலனிடம், ''உடனே ஒற்றர் விடுதிக்குச் சென்று காவி வஸ்திரம் இரண்டு கொண்டுவா!'' என்று கட்டளையிட்டார்.

காவி வஸ்திரம் வந்தவுடனே நாகநந்தி உடையை மாற்றிக் கொண்டார். சகோதரர்கள் இருவரும் ஒரே ஆசனத்தில் அருகருகே உட்கார்ந்தார்கள்.

''தம்பி! இப்போது சொல்லு! நீ வாதாபியை விட்டுப் புறப்பட்டது முதல் நடந்ததையெல்லாம் விவரமாகச் சொல்லு!'' என்று நாகநந்தி கேட்க, அவ்விதமே புலிகேசி கூறி வந்தார்.

எல்லாவற்றையும் கவனமாகக் கேட்ட பிறகு பிக்ஷு கூறினார்: ''ஆகா! மகேந்திர பல்லவன் நான் நினைத்ததைக் காட்டிலும் கெட்டிக்காரன். நெடுகிலும் நம்மை ஏமாற்றி வந்திருக்கிறான்!''

''அண்ணா! இராஜ்ய தந்திரத்தில் உன்னை வெல்லக் கூடியவன் இந்த உலகில் எவனுமே இல்லை என்று நினைத்திருந்தேன்.''

''ஆரம்பத்தில் நான் ஒரே ஒரு தவறு செய்தேன். அதன் பலன் நெடுகிலும் விபரீதமாகவே போய் விட்டது!''

''அடிகளே! அது என்ன தவறு?''

''பரஞ்சோதி என்னும் பிள்ளையின் முகத்தைப் பார்த்து என் மனம் சிறிது இளகிற்று.''

''அந்தத் திருட்டுப் பயலை நம்பி ஓலை கொடுத்து அனுப்பினாய்!''

''அதற்குக் காரணமானவன் நீதான் தம்பி!''

''நானா? அது எப்படி?''

''பாண்டிய நாட்டுக்குப் போய், அங்கே வேண்டிய ஏற்பாடுகள் செய்து விட்டுக் காஞ்சிக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தேன். வழியில் ஏரிக் கரையில் ஒரு பிள்ளை சோர்ந்து படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். உன்னை நான் முதன் முதலில் அதே நிலையில் பார்த்த ஞாபகம் வந்தது. அதனால் என் மனம் இளகி அந்தப் பிள்ளையின் பேரிலும் சிறிது விசுவாசம் உண்டாயிற்று. அவனுடைய முகக் களையிலிருந்து பெரிய பதவிக்கு வரப் போகிறவன் என்று தெரிந்துகொண்டேன். ஆகையால் அவனை நம்மோடு சேர்த்துக்கொள்ள வேண்டும் என்ற சபலமும் உண்டாயிற்று. அவனிடம் உனக்கு ஓலை கொடுத்து அனுப்பினேன். அந்த ஓலை உன்னிடம் சேர்ந்து நீ நேரே வந்திருந்தாயானால், காஞ்சிக்கோட்டையை மூன்றே நாட்களில் கைப்பற்றியிருக்க

# ஜலதோஷம் ஒழிக




## காப்பது கைகண்ட ஆறு மருந்துகளின் கலவையான

# ரபெக்ஸ்




வலுவாகத் தேய்ப்பதற்கான ஜலதோஷ நிவாரணி—ஜலதோஷத்தை அதி விரைவில் தணித்திட - அடைபட்ட மூக்கைத் திறக்க, மார்பிலுள்ள நெரிசலைக் கரைக்க, உடம்பிலே கதகதப்பூட்ட — தனிப்பட உருப்பெற்றது.

20 கிராம், 65 கிராம் புட்டிகளிலும், 6 கிராம் டப்பியிலும், வருபவை

**இலவச பால் பேனா*... 20 கிராம் புட்டி வாங்கும்போது.**

everest/921/ACW-tm

லாம். மகேந்திர பல்லவன் உன்னுடைய காலடியில் விழுந்து கிடப்பான்.''

''ஆனால் உன்னுடைய ஓலைக்கு மாறாக மகேந்திர பல்லவன் எழுதி வைத்த ஓலை என்னிடம் கிடைத்தது. அதன் பயனாக வடபெண்ணைக் கரையில் எட்டு மாதம் வீணாக்க நேர்ந்தது. மகேந்திர பல்லவன் ஒரு சிறு குதிரைப் படை வைத்துக் கொண்டு யுத்தம் செய்யாமல் வெறும் பாய்ச்சல் காட்டியே ஏமாற்றிக் கொண்டிருந்தான். அதற்குப் பிறகு நான் காஞ்சிக்கு வந்து கோட்டையை முற்றுகையிட்டும் பயன்படவில்லை. அண்ணா! நான் வாதாபிச் சிம்மாசனத்தில் ஏறியபிறகு முதன்முதலாக அடைந்த தோல்வி இதுதான்!''

''அப்பனே! அந்த வார்த்தையை மட்டும் சொல்லாதே! தோல்வி எது? யார் 'தோல்வி' அடைந்தது? இராஜரீக சாஸ்திரத்தில் முதலாவது பாடம் என்ன என்பதை இன்னமும் நீ தெரிந்து கொள்ளவில்லையா? தோல்வி அடைந்து விட்டதாக ஒருநாளும் ஒப்புக் கொள்ளக் கூடாதென்பதுதான் அந்தப் பாடம். நீயே தோல்வி அடைந்ததாகச் சொல்லிக் கொண்டால் ஊரார் அப்படிச் சொல்வார்கள்; உன் விரோதிகளும் அவ்விதமே சொல்வார்கள்; தேசமெங்கும் 'புலிகேசி சக்கரவர்த்தி தோல்வி யடைந்தார்!' என்று செய்தி பரவும். ஹர்ஷவர்த்தனன் காதிலும் அது எட்டும். மகேந்திர பல்லவன் பொய்யாக எழுதியபடி ஒருவேளை உண்மையில் நடந்தாலும் நடக்கலாம். நர்மதையைக் கடந்து ஹர்ஷனுடைய சைனியம் உன்னுடைய இராஜ்யத்துக்குள் பிரவேசிக்கலாம். தோல்வி என்ற வார்த்தையை இனிமேல் சொல்லாதே, தம்பி!''

''நான் சொல்லாமலிருந்து விட்டால் தோல்விவெற்றியாகிவிடுமா, அண்ணா?''

''மறுபடியும் தோல்வியைக் கட்டிக் கொண்டு ஏன் அழுகிறாய்? என்ன தோல்வியை நீ அடைந்தாய்? யோசித்துப் பார்! கடல் போன்ற சைனியத்துடன் திக்விஜயம் செய்யத் தென்னாட்டை நோக்கிப் புறப்பட்டாய். வைஜயந்தியை அழித்தாய். வட பெண்ணைக் கரையில் பல்லவ சைனியத்தை நிர்மூலம் செய்தாய். காஞ்சிக் கோட்டையை முற்றுகை யிட்டாய். தெற்கே கொள்ளிடக் கரை வரையில் சென்றாய். பல்லவன் சிறைப்படுத்தி யிருந்த துர்விநீதனை விடுதலை செய்தாய். காவேரிக் கரையில் தமிழகத்தின் மூவேந்தர்கள்—சேர, சோழ, பாண்டியர்கள் — வந்து உன் அடிபணிந்து காணிக்கை செலுத்தினார்கள்.''

''அண்ணா! சோழன் வரவில்லையே?''

''சோழன் வராவிட்டால் களப்பாளன் வந்தான். இதையெல்லாம் யார் விசாரிக்கப் போகிறார்கள்? தம்பி! நீ திரும்பிக் காஞ்சிக் கோட்டைக்கு வந்த போது மகேந்திர பல்லவனும் உன்னைச் சரணாகதி அடைந்தான். மகாபலியின் தலையில் மகாவிஷ்ணு பாதத்தை வைத்தது போல் நீயும் மகேந்திர பல்லவனுடைய சிரஸில் உன்னுடைய பாதத்தை வைத்துப் 'பிழைத்துப் போ' என்று உயிர்ப்பிச்சை கொடுத்தாய். அவன் கொடுத்த காணிக்கைகளைப் பெற்றுக் கொண்டு புறப்பட்டாய்....''

''காணிக்கை ஒன்றும் நான் கொண்டு வரவில்லையே, அண்ணா!''

''நீ கொண்டு வரா விட்டால் நான் கொண்டு வந்திருக்கிறேன்.''

''என்ன அது?''

''இன்று இரவு காட்டுகிறேன். மேற்படி விவரம் எல்லாம் உத்தர பாரத



தேசத்திலே பரவும்போது, நீ திக்விஜயம் செய்து வெற்றி முழக்கத்துடன் திரும்பினாய் என்று சொல்வார்களா? 'தோல்வி'யுற்று ஓடி வந்தாய் என்பார்களா?''

''அண்ணா! உன் சாமர்த்தியமே சாமர்த்தியம். தோல்வியைக் கூட நீ வெற்றியாக மாற்றக் கூடியவன். உன் பேச்சைக் கேட்ட பிறகு எனக்கே நான் அடைந்தது வெற்றி என்றே தோன்றுகிறது. ஆனால் இந்த வெற்றிச் செய்தி வடநாட்டில் எப்படிப் பரவும்?''

''ஆ! புத்த பிக்ஷுக்களின் சங்கங்களும், சமணர்களின் மடங்களும் பின் எதற்காக இருக்கின்றன? நாகார்ஜுன பர்வதத்துக்கு உடனே ஆள் அனுப்ப வேண்டும்.''

''அண்ணா! நீயே போவது நல்லது. உனக்கு வேங்கியிலும் வேலை இருக்கிறது!''

''என்ன வேலை?''

''விஷ்ணுவர்த்தனன் காயம்பட்டுக் கிடக்கிறான். சென்ற வருஷம் அவன் வெற்றி கொண்ட வேங்கி இராஜ்யத்தில் இப்போது எங்கே பார்த்தாலும் கலகமாம்.''

''அதற்கு நான் போய் என்ன செய்யட்டும்?''

''நீ போய்த்தான் அவனுக்கு யோசனை சொல்லி உதவ வேண்டும். உன்னால் முடியாத காரியம் ஒன்றுமில்லை, அண்ணா! தோல்வியையும் நீ வெற்றியாக்கிவிடுவாய்.''

''என்னால் இப்போது வேங்கிக்குப் போக முடியாது.''

''ஏன்?''

''காரணம் இருக்கிறது.''

''அதைச் சொல்லேன்.''

''இராத்திரி சொல்கிறேன், தம்பி! சூரியன் அஸ்தமித்து நாற்புறமும் இருள் சூழ்ந்து விட்டது. பூரண சந்திரன் உதயமாகப் போகிறது. இந்தக் கூடாரத்தினுள்ளேயே அடைந்து கிடப்பானேன்? வா, வெளியே போகலாம்!''

''ஆமாம், ஆமாம்! பிரகிருதியின் சௌந்தரியங்கள் அநியாயமாய் வீணாகிப் போகின்றன!'' என்று பரிகாசக் குரலில் சொல்லிக் கொண்டு புலிகேசிச் சக்கரவர்த்தி எழுந்தார்.

''உனக்கு எவ்வளவோ பாக்கியங்கள் இருந்தாலும் என்ன பயன்? சௌந்தரியத்தை அனுபவிக்கும் பாக்கியம் மட்டும் இல்லை'' என்று சொல்லிக் கொண்டு நாகநந்தி எழுந்தார்.

சகோதரர்கள் இருவரும் ஒத்த வயதுடைய ஆத்ம சிநேகிதர்களைப் போலக் கைகோத்துக் கொண்டு வெளியே சென்றார்கள்.

## நாற்பதாம் அத்தியாயம்

# அஜந்தா அடிவாரம்

'சூரியன் மறைந்தால் என்ன? அதோடு உலகம் அஸ்தமித்துப் போய் விடுமா? இதோ நான் ஒருவன் இருக்கிறேனே' என்று பறையறைந்து கொண்டு கீழ்த் திசையில் பூரணசந்திரன் உதயமானான்.

நெடிதுயர்ந்த இரண்டு பனைமரங்களுக்கு நடுவே தங்க ஒளி பெற்றுத் திகழ்ந்த சந்திர பிம்பமானது, மரச் சட்டமிட்ட பலகணியின் வழியாக எட்டிப் பார்க்கும் நவயௌவன நாரீமணியின் பொன் முகத்தையொத்து இன்ப வடிவமாய் விளங்கியது. புத்த பிக்ஷுவுக்கு அந்த முகம் சிவகாமியின் முகமாகவே காட்சி அளித்தது.

நாகநந்தியும் புலிகேசியும் கூடாரத்துக்கு வெளியே வந்து ஒரு மொட்டைப் பாறையின் மீது உட்கார்ந்தார்கள்.

''அண்ணா! என்ன யோசிக்கிறாய்?'' என்று புலிகேசி கேட்டார்.

''தம்பி! இன்றைக்கு நான் கூடாரத்துக்குள்ளே வந்தபோது உன்னைப் போல் உடை தரித்துக் கொண்டு வந்தேனல்லவா? இதே மாதிரி முன்னொரு தடவை உன்னைப் போல் வேஷம் தரித்துக் கொண்டேனே. உனக்கு ஞாபகம் இருக்கிறதா?''

''அதை எப்படி மறக்க முடியும், அண்ணா? ஒருநாளும் முடியாது.''

''இல்லை, இருபத்தைந்து வருஷம் ஆகிவிட்டதே! ஒரு வேளை மறந்துவிட்டாயோ என்று நினைத்தேன்.''

''இருபத்தைந்து வருஷம் ஆனால் என்ன? இருபத்தைந்து யுகம் ஆனால் என்ன? இந்தப் பிறவியில் மட்டுமல்ல, எத்தனை பிறவி எடுத்தாலும் மறக்கமுடியாது, அண்ணா!''

''முதன் முதலில் நாம் சந்தித்தது நினைவிருக்கிறதா, தம்பி!''

''ஏன் நினைவில்லை? சித்தப்பன் மங்களேசனுடைய கடுஞ் சிறையிலிருந்து தப்பி ஓடி வந்தேன். அந்தப் பாதகனுடைய வீரர்களுக்குத் தப்பி ஒளிந்து காட்டிலும் மலையிலும் எத்தனையோ நாட்கள் திரிந்தேன். ஓடி ஓடிக் கால்கள் அலுத்துவிட்டன. உடம்பும் சலித்துவிட்டது. பசியும் தாகமும் எவ்வளவு கொடுமையானவை என்பதை உணர்ந்தேன். கடைசியில் ஒருநாள் களைப்படைந்து சோர்ந்து மூர்ச்சையாகிவிட்டேன். மூர்ச்சை தெளிந்து எழுந்த என்னை மடியில் போட்டுக் கொண்டு என் வாயில் ஏதோ பச்சிலைச் சாற்றைப் பிழிந்து கொண்டிருந்தாய். நீ மட்டும் அச்சமயம் தெய்வாதீனமாய் அங்கு வந்திராவிட்டால் என் கதி என்ன ஆகியிருக்கும்? அண்ணா! அவ்வளவு சிரமம் எடுத்து என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று உனக்கு எதனால் தோன்றிற்று?''

''எனக்கு விவரம் தெரிந்த நாள் முதல் நான் அஜந்தா மலைக் குகையில் புத்தபிக்ஷுக்களுடன் வாழ்ந்துகொண்டு வந்தேன். சித்திரக் கலை, சிற்பக் கலை முதலியவை தெரிந்து கொண்டிருந்தேன். ஆயினும் அடிக்கடி என் மனம் அமைதி இழந்து தவித்தது. வெளி உலகத்துக்குப் போக வேண்டும் என்றும் என்னையொத்த வாலிபர்களுடன் பழக வேண்டும் என்றும் ஆசை உண்டாகும். சில சமயம் பெரிய பிக்ஷுக்களுக்குத் தெரியாமல் நதி வழியைப் பிடித்துக் கொண்டு மலைக்கு வெளியே வருவேன். ஆனால், அங்கும் ஒரே காடாக இருக்குமே தவிர மனிதர்கள் யாரையும் பார்க்க முடியாது. இப்படி நான் ஏக்கம் பிடித்திருக்கையிலேதான் ஒரு நாள் அஜந்தாவின் அடிவாரத்தில் உள்ள காட்டிலே நீ நினைவிழந்து படுத்துக் கிடப்பதைக் கண்டேன். அந்த நிமிஷத்தில் இருபது வருஷங்களாக என் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்த அவ்வளவு ஆசையையும் உன் பேரில் செலுத்தினேன். அந்த வயதில் நாடு நகரங்களில் உள்ள வாலிபர்கள் தங்களுடைய இளங் காதலிகளிடம் எத்தகைய அன்பு வைப்பார்களோ, அத்தகைய அன்பை உன்னிடம் கொண்டேன். பச்சிலையைச் சாறு பிழிந்து உன் வாயிலே விட்டு மூர்ச்சை தெளிவித்தேன்.''

''அண்ணா! உன்னை முதன் முதலில் பார்த்ததும் எனக்கும் அம்மாதிரியே உன் பேரில் அபிமானம் உண்டாயிற்று. தம்பி விஷ்ணுவர்த்தனின் பேரில் எனக்கு எவ்வளவோ ஆசைதான். ஆனாலும், அதைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு அதிகமான பாசம் உன் பேரில் ஏற்பட்டது.....''

''உன்னைக் கண்டுபிடித்த அன்றைக்கு நான் அஜந்தா குகைக்குத் திரும்பிப் போகவில்லை. அடுத்த இரண்டு மூன்று நாளும் போகவில்லை. புது மணம் புரிந்த காதலர்கள் இணை பிரியாமல் நந்த வனத்தில் உலாவுவது போல் நாம் இருவரும் கைகோத்துக் கொண்டு காட்டிலே திரிந்தோம். நீ உன்னுடைய வரலாற்றையெல்லாம் எனக்கு விவரமாகச் சொன்னாய். நாம் இருவரும் அப்போதே மங்களேசனைத் துரத்தியடித்து வாதாபி இராஜ்யத்தைத் திரும்பக் கைப்பற்றும் மார்க்கங்களைப் பற்றி ஆலோசிக்கலானோம்.''

''இதற்குள் மங்களேசனுடைய ஆட்கள் என்னைத் தேடிக் கொண்டு அங்கே வந்து விட்டார்கள்.''

''தூரத்தில் ஆட்கள் வரும் சத்தம் கேட்டதும் நீ பயந்தாய். 'அண்ணா! என்னைக் கைவிடாதே!' என்று கட்டிக் கொண்டாய். ஒரு நிமிஷம் நான் யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தேன். 'தம்பி! நான் சொல்கிறபடி செய்வாயா?' என்று கேட்டு உன்னிடம் வாக்குறுதியொன்று வாங்கிக் கொண்டேன். பிறகு உன்னுடைய உடைகளை எடுத்து நான் தரித்துக் கொண்டேன். என்னுடைய ஆடையை நீ உடுத்திக் கொண்டாய். அதே சமயத்தில் அஜந்தா மலைக் குகைக்குள் புத்த சங்கராமத்துக்குப் போகும் வழியை உனக்கு நான் சொன்னேன். அங்கு நீ நடந்து கொள்ள வேண்டிய விதத்தையும் சொன்னேன். பிறகு சற்றுத் தூரத்தில் இருந்த அடர்ந்த கிளைகள் உள்ள மரத்தின்மேல் ஏறி ஒளிந்து கொள்ளச் சொன்னேன்.''

''மரத்தின் மேல் ஏறி ஒளிந்து கொண்டதுதான் தாமதம். மங்களேசனுடைய ஆட்கள் யமகிங்கரர்களைப் போல் வந்து விட்டார்கள். அவர்களுடைய தலைவன் உன்னைச் சுட்டிக் காட்டி, 'பிடித்துக் கட்டுங்கள் இவனை' என்று கட்டளையிட்டான். என் நெஞ்சு துடியாகத் துடித்தது. எப்பேர்ப்பட்ட அபாயத்திலிருந்து தப்பினோம் என்று எண்ணினேன். உன்னிடம் அளவற்ற நன்றி உணர்ச்சி உண்டாயிற்று.''

''தம்பி! நம்முடைய உருவ ஒற்றுமையை நான் அதற்கு முன்னமே தெரிந்து கொண்டிருந்தேன். நதியிலும் சுனையிலும் நாம் குளித்துக் கரையேறும் போது, தண்ணீரில் தெரிந்த நமது பிரதிபிம்பங்களைப் பார்த்து அறிந்து கொண்டிருந்தேன். அப்படித் தெரிந்து கொண்டிருந்தது அச்சமயம் உன்னைக் காப்பாற்றுவதற்கு ஏதுவாயிற்று.''

''அண்ணா! அந்தச் சம்பவமெல்லாம் எனக்கு ஞாபகம் இருக்கிறதா என்று கேட்டாயே! முன்பின் அறிந்திராத எனக்காக நீ உன் உயிரைக் கொடுக்கத் துணிந்ததை என்னால் எப்படி மறக்க முடியும்?'' என்று குரல் தழுதழுக்க உருக்கத்துடன் புலிகேசிச் சக்கரவர்த்தி கூறியபோது, அவருடைய கண்களிலே கண்ணீர் துளித்தது. 'ஆ! இதென்ன? நெஞ்சில் ஈரப் பசையற்ற இராதக புலிகேசியின் கண்களிலும் கண்ணீரா? இது உண்மை தானா?' என்று பரிசோதித்துத் தெரிந்து கொள்வதற்காகப் பூரணசந்திரன் தனது வெள்ளிக் கிரணங்கள் இரண்டை ஏவ, அது காரணமாகப் புலிகேசியின் கண்ணில் எழுந்த நீர்த் துளிகள் ஆழ்கடல் தந்த நன்முத்துக் களைப் போல் சுடர்விட்டுப் பிரகாசித்தன.

(தொடரும்)

அன்று சற்றுத் தலைவலியாக இருந்ததால் நான் அலுவலகத்திலிருந்து 'பர்மிஷன்' வாங்கிக்கொண்டு சீக்கிரமாகக் கிளம்பி விட்டேன்.

மணி நாலரைதான் ஆகியிருந்தது. சுகந்தி வருவதற்கு இன்னும் குறைந்த பட்சம் ஒரு மணி நேரமாவது ஆகும். ஐந்து மணி பஸ்ஸைப் பிடித்தால்கூட ஐந்து இருபது, ஐந்தரை ஆகிவிடும். நானும் அவளும் ஒரே அலுவலகத்தில்தான் வேலை பார்க்கிறோம். ஆனால் வெவ்வேறு பிரிவுகளில். சாதாரணமாக நாங்கள் அலுவலகத்தில் சந்தித்துக் கொள்வது 'லஞ்ச்' சமயத்தில் மட்டும்தான். மாலையில் என் நண்பர்களுடன் புறப்பட்டு விடுவேன். அவளும் தன் தோழிகளுடன் ஏதாவது ஊர்க்கதை பேசிக் கொண்டு வருவாள். சில சமயங்களில் இருவரும் ஒரே பஸ்ஸில் வரும்படி நேரும். பிறகு சேர்ந்தே வீட்டுக்கு வருவோம்.

ஒரே பிரிவில் இருவரும் வேலை செய்யும் வாய்ப்பு ஏற்பட்டபோதுதான் எங்கள் இருவருக்கும் பரஸ்பரம் அன்பு உண்டாயிற்று. இருவரும் ஒரே சமூக வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் என்னுடைய பெற்றோர்கள் எதிர்பார்த்த அளவு சுகந்தியின் பெற்றோர்கள் எங்கள் திருமணத்தை விமரிசையாக நடத்த ஒப்புக்கொண்டதாலும் எங்கள் காதலுக்கு எந்தவிதமான தடங்கலும் இல்லை.

''உங்களுக்கு விஷயம் தெரியுமா?'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தவள் நான் படுத்திருக்கும் நிலையைக் கண்டு பதறி விட்டாள்.

''ஏன்னா! உங்க உடம்புக்கு என்ன? ஏன் ஒரு மாதிரி இருக்கேள்?'' என்று கேட்டவள் அருகே வந்து என் நெற்றியில் கையைவைத்து ஜுரம் வந்திருக்கிறதா என்று பார்த்தாள். இளம் நுங்கைப் போன்ற மென்மையான அந்தக் கரம் என் நெற்றியின் மேல் பட்டவுடன் என் தலைவலியில் பாதி குறைந்து விட்டது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது.

''ஒன்றுமில்லை சுகந்தி! இலேசான தலைவலிதான்! அதனால்தான் ஆபிசிலிருந்து சீக்கிரம் கிளம்பி விட்டேன். உன்னிடம் சொல்லிவிட்டு வரலாம் என்று உன்னுடைய செக்ஷனுக்கு வந்தேன். நீ காண்டீனுக்குச் சென்றிருப்பதாக உன் சிநேகிதி சொன்னாள். ஒன்றும் சொல்லாமல் நான் உடனே கிளம்பி விட்டேன்'' என்றேன்.

''உடம்பு சுடலை. சூடாகக் காப்பி போட்டுக்கொண்டு வருகிறேன். காப்பி சாப்பிட்டால் தலைவலி சரியாகி விடும்'' என்று கூறிவிட்டு உள்ளே சென்றாள். அவள் நடையில் ஒரு வேகமும் முகத்தில் எதையோ வெளியிடத் துடிக்கும் ஒருவித பாவமும் இருந்ததைக் கவனித்தேன்.

காப்பியுடன் வந்தவள் என் அருகில் உட்கார்ந்த வண்ணம் காப்பியை ஆற்றிக் கொண்டே மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள்.

''புதுசா ஒரு பெண்ணை நம்ப ஆபிஸிலே 'அப்பாய்ண்ட்' பண்ணி எங்க 'செக்ஷன்'லே 'போஸ்ட்' பண்ணியிருக்காளே! நீங்க கவனிச்சேளா?'' என்றாள்.

''நான் சீக்கிரம் வீட்டுக்குக் கிளம்புவதைக் கூறுவதற்கு வந்தபோது, புதுசா ஒரு பெண் உன் 'செக்ஷனி'ல் இருந்ததைப் பார்த்தேன். ஆமாம், அவளுக்கு என்ன?'' என்று வினவினேன்.

''நீங்களும் பார்த்தேளா? வனஜா எவ்வளவு அழகா இருக்கா! ஆனா பாவம்! அவளுக்குக் கல்யாணம் ஆகி ஆறுவது மாசத்திலேயே அவள் கணவன் ஒரு 'ஆக்ஸிடெண்டி'லே செத்துப் போயிட்டாராம். அதே






ஏக்கத்திலே அவள் தகப்பனாரும் போய் விட்டாராம்? நாலு மாசத்துக்குள் அம்மா பொண்ணு இரண்டு பேரும் வீணாப் போயிட்டாளாம். இப்போ இவளுடைய சம்பாத்தியத்தில் இவ, அம்மா, இரண்டு தம்பிகளோடு குடும்பம் நடக்கிறதாம்!''

''ச்சு...ச்சு...கேட்பதற்கே ரொம்பவும் கஷ்டமா யிருக்கிறதே! அவள் கணவன் இறந்து போய் எவ்வளவு நாளாகிறதாம்?''

நான் கேட்டவுடன் சுகந்தி மிகுந்த வேகத்துடன் வனஜாவின் கதையைக் கூற ஆரம்பித்து விட்டாள்.

''வனஜாவின் அப்பா என்னிக்குமே ஒரு நல்ல வேலையில் நிலைச்சு இருந்ததில்லையாம். அவ அம்மாதான் நாலு இடத்திலே வேலை செஞ்சும் அப்பளாம், வடாம் பண்ணி விற்றும் அவளைப் படிக்க வச்சிருக்காள். வனஜாவும் எங்கெல்லாமோ வேலைக்கு முயற்சி பண்ணியும் கிடைக்காததனாலே அவ அம்மா



இருக்கிற கஷ்டத்தோட கஷ்டமா அவளுக்குக் கல்யாணம் பண்ணிடலாம்னு முனைஞ்சாளாம். நம்ப ஆபீசோட பம்பாய் பிராஞ்சில் வேலை செய்த சுதாகர் என்ற பையன் வனஜாவோட அழகைப் பார்த்துட்டு வரதட்சிணை வேண்டாம்னு சொல்லிட்டு இவளைக்கல்யாணம் பண்ணிண்டானும். பம்பாயிலே அவன் இருந்த இடம் போறாததனாலே வேறே இடம் பார்த்துண்டு அஞ்சாறு மாசம் கழிச்சி இவளைக் கூட்டிக்கிறதாப் பேச்சாம். 'சாந்தி' கூடப் பண்ணலே. திடீர்னு ஒரு நாள் ராத்திரி 'மாப்பிள்ளை சீரியஸ்; உடனே வரவும்' என்று தந்தி வந்ததாம். 'ஸ்கூட்டர்' ஆக்ஸிடெண்டிலே மாட்டிண்டவன் மண்டையிலே நல்ல அடிபட்டு ஆஸ்பத்திரியிலே அட்மிட் ஆகி இருந்திருக்கான். வனஜா பம்பாய் போய்ச் சேரதுக்கு முன்னாலேயே அவன் போய்ச் சேர்ந்துட்டானும். காரியமெல்லாம் முடிஞ்சு இவள் சென்னை திரும்பறபோது, நம் மானேஜ்மெண்ட் இவ மேலே பரிதாபப்பட்டு சென்னையிலேயே நம்ப ஆபீஸிலே இவளுக்கு 'அப்பாயிண்ட்மெண்ட்' கொடுத்திருக்கா. கல்யாணம் ஆகிறதுக்கு முன்னாலே வேலைக்குப் போகணும்னு இவ துடியாத் துடிச்சிருக்கா. அப்பல்லாம் வேலை கிடைக்கல்லே. கல்யாணம் ஆனப்பறம் நமக்கு எதற்கு வேலை என்று நினைத்திருக்கிறபோது நீ வேலைக்குப் போய்த்தான் ஆகணும்னு சொல்ற மாதிரி தெய்வம் வனஜாவை இந்த நிலைக்குக் கொண்டு வந்து தள்ளிடுத்து. இதையெல்லாம் சொல்லி இன்னிக்கு அழுதா தெரியுமா?'' என்று சொல்லும் போதே சுகந்தியின் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வடிந்தது.

''அடி பைத்தியமே! நீ ஏன் இப்போ அழுறே! என்ன பண்ணறது! சிலபேருடைய வாழ்க்கையிலே விதி இப்படித்தான் குரூரமாக விளையாடி விடுகிறது. நமக்கு வனஜாவை மட்டும்தான் தெரியும். வனஜா மாதிரி இன்னும் எவ்வளவோ பேர் இருக்கா. அவளுக்குத் தைரியம் சொல்ல வேண்டியவள், நீயே மனசைத் தளர விடறயே!'' என்று சுகந்திக்கு ஆறுதல் சொன்னேனே தவிர என் மனமும் கனத்தது.

கண்களைத் துடைத்துக் கொண்டவள், கோபத்துடன், ''தெய்வத்துக்குக் கண்ணே கிடையாது! எத்தனையோ கிழம், கட்டைகள் எல்லாம் கண்ணில்லாமல், காது கேட்காமல்

அல்லாடும்போது இளம் வயதுக்காரர்களை ஏன்தான் சாகடிக்கிறதோ? அழகும் இளமையும் கொண்ட ஓர் ஏழைப் பெண்ணின் வாழ்க்கையைப் பாழடிக்க அதற்கு எப்படித் தான் மனசு வந்ததோ?'' என்று அங்கலாய்த்துக்கொண்டாள்.

இம்மாதிரி சுகந்தி உணர்ச்சி வயப்படும் நேரங்களில் பேசாமல் இருந்துவிட்டால் சற்று நேரத்தில் அவள் தன்னிலைக்கு வந்து விடுவாள். அவ்வாறே தன் வேலைகளைக் கவனிக்கச் சென்றவள் பழையபடி கலகலப்பாக ஆகி விட்டாள்.

மறுநாள் அலுவலகத்தில் வனஜாவைச் சமீபத்தில் பார்க்கும்படியான வாய்ப்பு ஏற்பட்டது. பார்ப்பதற்கு லட்சணமாயிருந்தாலும் அவளுடைய ஆன்மாவில் ததும்பிய சோகத்தை முகம் பிரதிபலித்தது. மிகவும் பரிதாபமாகத்தான் இருந்தது. சுகந்தியும் அவளுடன்தான் இருந்தாள். இருவரும் மிகவும் நெருங்கிப் பழகி விட்டார்கள் என்று எனக்குப் புரிந்தது.

தினமும் ஆபீசிலிருந்து வந்தவுடன் வனஜாவைப் பற்றி ஒரு புராணம் கூறாமல் சுகந்தியால் இருக்க முடியாது. நானும் பொறுமையாகக் கேட்டுக் கொள்வேன். என்ன செய்வது? தொட்டுத் தாலி கட்டிய மனைவியாயிற்றே!

ஆறேழு மாதங்கள் சென்றிருக்கும். மறுநாள் நான் பலமுறை படையெடுத்தும் பாஸ் ஆகாத ஆபீஸ் பரீட்சை ஒன்று எழுத வேண்டியிருந்ததால் படிப்பதற்காக அன்று லீவு போட்டுவிட்டு வீட்டில் இருந்தேன். மாலை சுமார் நாலு மணி இருக்கும். தெருமுனையில் சுகந்தி வருவது தெரிந்தது. 'வழக்கத்தை விட இன்று சீக்கிரம் வருகிறாளே! உடம்பு ஏதாவது சரியில்லையா? அல்லது நான் வீட்டில் இருக்கிறேனே என்று சீக்கிரம் வந்து விட்டாளா?' என்று எனக்குள் கேட்டுக் கொண்டேன்.

வந்தவள் முகத்தில் களையே இல்லை. ''ஏன் சுகந்தி! ஒரு மாதிரியாக இருக்கிறாய்! உடம்பு சரியில்லையா?'' என்று வினவினேன்.

''உடம்புக்கு என்ன, கொழுக்கட்டை மாதிரி இருக்கேன்!'' என்று வெடுக்கென்று பதிலளித்தாள்.

'சரி! இவளுடைய மனத்தில்தான் கோளாறு. பேசாமல் இருந்து விட்டால் தானே விஷயத்தைச் சொல்லி விடுவாள்!' என்று சும்மா இருந்து விட்டேன்.

உள்ளே போய் உடையை மாற்றிக் கொண்டு வந்தபிறகும் அவள் அப்படியே இருப்பதைக் கண்டு, ''இன்று என் தேவிக்கு என்ன வந்து விட்டது? ருத்ரம் ஒரேயடியாய்த் தாண்டவமாடுகிறது!'' என்று நான் கேட்டவுடனே ஆரம்பித்தாளே பார்க்க வேண்டும்! படபடவென்று பொரிந்து தள்ளி விட்டாள்.

''காலம் ரொம்பவும் கெட்டுப் போய்க் கிடக்கிறது. யார் நல்லவர்கள், யார் கெட்டவர்கள் என்று புரிந்துகொள்வது எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது! அப்பப்பா! என்னமாய் வேஷம் போட்டான்! சீச்சீ... இந்த மாதிரி ஜென்மங்கள் உயிருடன் இருப்பதை விடச் சாவது எவ்வளவோ மேல்!'' கோபத்தில் வார்த்தைகள் வந்ததால் அவளுக்கு மூச்சு இரைத்தது.

''என்ன சுகந்தி? யார் வேஷம் போட்டது? ஒன்றும் புரியவில்லையே! சற்று நிதானித்து விஷயத்தைச் சொல்லிவிட்டு அப்புறம் உனக்கு வேண்டிய மட்டும் கோபப் படேன்!'' என்றேன்.

''நல்லவன் மாதிரி வேஷம் போட்டானே, அந்த வனஜா! அவள் என்ன செய்துவிட்டாள் தெரியுமா? என் செக்ஷனிலே வேலை பார்த்துக் கொண்டிருக்கிறானே பாஸ்கர் என்ற பையன், அவனைக் காதலித்துக் கல்யாணம் பண்ணிண்டுட்டாளாம்.''

எனக்கு மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டது. இளமையிலேயே விதவையாகி, வாழ்க்கையின் சுவைகளை இழந்துவிட்டாள் என்று எந்தப் பெண்ணுக்காக ஒரு நாள் கண்ணீர் விட்டாளோ அவளுக்கு மறு வாழ்வு கிடைத்து விட்டது என்ற செய்தி கிடைத்தவுடன் மகிழ்ச்சியடையாமல் அந்தப்பெண்ணை வாயில் வந்தபடி இவள் எதற்காகத் திட்டுகிறாள் என்று எனக்குப் புரியவில்லை.

''ஏன் சுகந்தி! வனஜாவின் வாழ்க்கையை இளமைப் பருவத்திலேயே அநியாயமாய்ப் பறித்துக் கொண்டுவிட்டது என்று தெய்வத்தை அன்று சபித்தாயே! அந்தத் தெய்வமே அவளுக்கு இன்று மறு வாழ்வு கொடுத்திருக்கும்போது அதை வாழ்த்தாமல் வனஜாவைப் போய் ஏன் திட்டுகிறாய்?'' என்றேன்.

# கண்களை ஒருபோதும் கசக்க வேண்டாம்...



# கரிக்கும் கண்களுக்குத் தேவை வைஸின்

கரித்தாலும், களைப்படைந்தாலும், கூசினாலும் கண்களைக் கசக்காதீர்கள். சிவந்த கண்களை நிமிட நேரத்தில் இதமுடன் தெளிவாக்கு-வதற்கு வைஸின் இருக்கிறது.
வைஸின் உபயோகியுங்கள்.
கண்கண்ட பலனை உலகெங்கும் உணர்த்தியுள்ளது வைஸின்.
அது வன்மை வாய்ந்தது,
எனினும் மென்மை கனிந்தது.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

**சில்லறை விலை ரூ. 2.97**
(தல வரிகள் தனி.)

# வைஸின்

**சோர்ந்த கண்களிலே கதிரொளி ஈவது வைஸின்**




**60 வினாடிப் பரிட்சை**

இந்த எளிய வைஸின் பரிட்சையை ஏற்றுப் பாருங்கள். சிவந்த ஒரு கண்ணிலே இரு சொட்டு வைஸின் விட்டுக் கொள்ளுங்கள். ஒரு நிமிடம் கழித்துக் காண்பீர்கள் அத்தாட்சி —ஒரு விழியில் சிவப்பு, மறு விழியில் தெளிவு. (இனி, சிவந்த விழியிலும் வைஸின் இட்டு தெளிவாக்குங்களேன். கண் சிவப்போ, கரிப்போ நீடித்தால், டாக்டரிடம் ஆலோசனை கேளுங்கள்).

Pfizer : பைசர் தயாரிப்பு: "உலக நலனை நாடும் விஞ்ஞானம்"

Pfizer

லின்டாஸ்-PZ.VI.2a-140 TH

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை!
இளமைப் பூங்காவில் பூரிப்புடன்
பூத்துக் குலுங்கும் இந்த
இளமங்கை, அழகு
ராணியாகத் திகழ்கிறாள். அந்த
புத்தெழில் என்றுமே நிலைத்திட
அவள் ஜெய் அழகு சாதன சோப்
உபயோகிக்கிறாள். மல்லிகை மணம்
வீசும் ஜெய் சோப் மேனியை
மிருதுவாக்கி, பொன்னொளி
வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்

**ஜெய்**

அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM

# ஆராய்ச்சிக்கு ஓர் அகாடமி பரிசு!



"திருக்குறள் ஒரு நீதி நூல்தானே? அதனை எப்படி இலக்கிய வகையில் சேர்க்க முடியும்?"

இப்படிக் கேட்டவர், கல்கி நேயர்களுக்கு அறிமுகமான ஹிந்திக் கதாசிரியர் காலஞ்சென்ற சுதர்சன். படைப்பிலக்கியத்தின் பால் உள்ள பிரேமை அவரை அப்படிக் கேட்க வைத்தது.

வான் சிறப்பை ஹிந்திப்படுத்தி — உரை நடையில்தான் — பொதுப் பொருள், விசேஷப் பொருள் ஆகியவற்றை அறிந்தவரை எடுத்துரைத்தபொழுது அவர் வியந்து கூறினார், 'இதுவல்லவோ இலக்கியம்!' என்று. வெறும் மொழிபெயர்ப்பைப் பார்த்தே அப்படிக் கூறியவர் கவிநயமிகு அந்த நூலின் மூலத்தைப் படித்துச் சுவைக்கும் வாய்ப்புக் கிட்டியிருந்தால் எப்படி மகிழ்ந்திருப்பாரோ?

எனவே, 'திருக்குறள் நீதி இலக்கியம்' என்னும் தலைப்பில் திருக்குறள் ஆராய்ச்சியை வெளியிட்டுத் திரு க. த. திருநாவுக்கரசு அவர்கள் சாகித்திய அகாதமிப் பரிசைப் பெற்றதைப் புரட்சி என்றாலும் இதில் சிலர் எண்ணுவது போல் முறைகேடு ஏதுமில்லை.

இந்நூலைப் படிப்பவர்கள் நீதி இலக்கியம் பற்றி உலகத்தில் வழங்கும் அத்தனை நூல்களையும் ஓரளவு அறிந்துகொள்ளும் வாய்ப்பைப் பெறுவார்கள்.

உலகத்தில் வழங்கும் மொழிகள் பலவானாலும் உள்ளத்து மொழி ஒன்றே என்பதை இந்த நீதி நூல்களே வெகு அழகாக எடுத்துக் காட்டுகின்றன. தமிழின் நீதி நூல்களோடு உலகத்தின் ஏனைய மொழிகளின் நூல்களையும் ஒப்பிட்டு நோக்கிப் பார்த்துத் திரு திருநாவுக்கரசு, ஆராய்ச்சி இலக்கியத்தை ஒரு படைப்பு இலக்கியச் சுவையுடன் வழங்கியுள்ளார். அதோடு வள்ளுவருடைய கவி மாண்பையும் எழிலுற எடுத்துக் காட்டுகிறார்.

**'மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து'**

என்று நீதி இலக்கியத்திலும் கவி வண்ணம் காட்டியவர் வள்ளுவர்.

படைப்பிலக்கிய வளர்ச்சிக்கு ஆராய்ச்சி இலக்கியம் வளர வேண்டும்; ஆராய்ச்சி இலக்கிய வளர்ச்சி படைப்பிலக்கியத்துக்கு வழி காட்டுவதாக அமைய வேண்டும் என்ற நல்ல நோக்கத்தோடு இவ்வாண்டு மூன்று மொழிகளில் ஆராய்ச்சி நூல்களுக்குச் சாகித்திய அகாதமிப் பரிசு கிடைத்திருக்கிறது.

தமிழில் வளரும் ஆராய்ச்சித் துறை வளமாக வளருகிறது என்பதைக் கண்டு மகிழ்கிறோம்.

- ரா. வீ.

---

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் வனஜா செய்தது சரிதான் என்று சொல்வீர்கள்போல் இருக்கிறதே. எனக்கு என்னமோ அவள் இம்மாதிரி இரண்டாம் கல்யாணம் பண்ணிண்டது சரியாகப் படவும் இல்லை; இந்தச் செய்தியை என்னால் ஜீரணிக்கவும் முடியவில்லை" என்று பொரிந்து தள்ளிவிட்டு உள்ளே சென்றுவிட்டாள்.

எனக்கு அவள் போக்கு பெரும் புதிராக இருந்தது. வனஜாவின் மீது இவள் படும் கோபம் எனக்கு அர்த்தமற்றதாகப்பட்டது.

அக்கோபத்துக்குக் காரணம் இத்தனை நாள் நெருங்கிப் பழகியும் இந்த விஷயத்தைத் தன்னிடம் கடைசி வரையில் சொல்லாமல் மறைத்து வனஜா திருமணம் செய்து கொண்டு விட்டாளே என்ற ஆற்றாமையா?... அல்லது தன் பரிதாபத்துக்கு உள்ளாகும் நிலையில் இருந்த வனஜா இனி தன்னைப் போலவே எல்லா விதத்திலும் வாழ முடியும் என்ற நிலையை ஏற்படுத்திக் கொண்டு விட்டாளே என்ற பொறாமையினாலா... அல்லது... கணவன் இறந்துவிட்டான் என்றதொரு பரிதாப நிலையின் அடிப்படையில் ஒரு வேலையைத் தேடிக் கொண்டு, பிறகு அவனை மறந்துவிட்டு, அந்த வேலையின் மூலமாய் வேறொருவனைத் துணையாகத் தேடிக் கொண்டுவிட்டாளே என்ற வெறுப்புணர்ச்சியினாலா?... அல்லது... இம்மாதிரி மறுமணம் செய்து கொண்ட பிறகு அவளையே கதியாய் நம்பிக் கொண்டிருக்கும் அவளது தாயையும், தம்பிகளையும் தவிக்க விட்டுவிடுவாளோ என்கிற ஆதங்கத்தினாலா? ....அல்லது.... நமது பண்பாட்டின்படி விதவைகள் மறு மணம் செய்து கொள்வது ஏற்றுக் கொள்ளக்கூடிய விஷயம் அல்ல என்ற ரத்தத்தில் ஊறிப் போன, பழமையான கொள்கையிலின்று விடுபட முடியாத தவிப்பினாலா?... அல்லது... முடிவு காண முடியாத அளவுக்குக் கேள்விக் குறிகள் என்னிடம் வந்து அலை மோதின!

வாழ வேண்டிய வயதில் விதவையாகிவிட்டாளே என்று ஒரு பெண்ணின் நிலையைக் கண்டு நெஞ்சார உருகினாள் என் மனைவி. அவளுடைய உணர்ச்சிக் குவியலின் ஒரு பக்கத்தைக் முன்பு கண்டேன் நான். அதே பெண் மறுமணம் செய்து கொண்டு புதுவாழ்க்கை பெற்ற போது அந்நிலையை ஏற்றுக் கொள்ள முடியாமல் என் மனைவி தவிப்பதையும் இப்போது பார்த்தேன். அவளது உணர்ச்சிகளின் மறு பக்கத்தைப் புரிந்து கொள்ள முடியாத அசக்தனாக நின்றேன்.

# THERE ARE ONLY TWO KINDS OF WOMEN-

## THOSE WHO READ *femina* AND THOSE WHO DON'T

## WHICH KIND ARE YOU?

**If you are not already one among our 16 lakh readers*, do yourself a favour.....start ordering your copies of Femina today.**

Twice every month, Femina will speak on issues that need to be talked about. We will take you from the metros to the suburbs, from the small towns to the villages, to show you the new Indian woman at work and in the home. We will bring you her ideas on health, politics, the economy, clothes, furniture, films and books—the whole business of living—right up to your doorstep. Maybe you will want to give Femina to your husband, your children, your friends. So that they can understand you better. Don't wait another day !

*BUY YOUR COPY TODAY!!*

*Source : ORG Survey

*femina*

INDIA'S FASTEST GROWING FORTNIGHTLY

# பொன்னியின் புதல்வர்

சுந்தா



## 25. கபாலீச சைதன்யர்

சேவையோடு கூடத் தியாகம் — மேலும்
தியாக தாரணைச் சாத்திரப் பாடம்
ஆவலோடு செய்யும் பான்மை — நல்ல
ஆக்க வேலைகளில் ஆர்வத்தோடு உழைப்பு

—விவேகானந்த விஜயம்

இந்தக் கபாலீசச் சைதன்யர் கல்கியின் எந்த வரலாற்று நாவலில் வருகிறார்? எதிலும் அல்ல. கல்கியின் வாழ்க்கை வரலாற்றில்தான் வருகிறார். இந்த வரலாற்று நாயகரின் பால்ய நண்பர் முத்துக்கிருஷ்ணன், சுவாமி ருத்ரானந்தராய்ச் சந்நியாச ஆசிரமம் பூணுவதற்கு முன்னால், மூன்றாண்டு காலம் பிரம்மச்சரிய ஆச்ரமத்தில் இருந்தபோது கொண்டிருந்த பெயரே இது. இந்த அத்தியாயத்தில் மேலே உள்ள மேற்கோள், விவேகாநந்தரின் வாழ்க்கைக் கதையைக் கபாலீசச் சைதன்யர் பாடலாய் இயற்றியுள்ள நூலில் உள்ளது.

கல்கி திருமணமாகிச் சென்னைக்குத் திரும்புவதற்குள் முத்து, மயிலாப்பூரில் உள்ள இராமகிருஷ்ண மடத்தில் சேர்ந்துவிட்டார். உடனேயே ஏழைகளுக்கு உதவும் பணிகளில் தீவிரமாய் ஈடுபட்டார். அந்த ஈடுபாட்டினிடையே கல்கியின் திருமணத்தின் போது அவர் கூறியபடியே அவர்களுடைய நட்பு தொடர்ந்து வளர்ந்தது. ஆசிரம வேறுபாடு அதற்குத் தடையாய் இருக்கவில்லை. இருவரும் அடிக்கடி சந்தித்துக் கொண்டார்கள். அந்தச் சந்திப்புக்களின் போது, அகஸ்தியரின் எழுத்து முயற்சிகளைக் கபாலீசரும், கபாலீசரின் காருண்யப் பணிகளை அகஸ்தியரும் பரஸ்பரம் பாராட்டி ஊக்கம் ஊட்டிக் கொள்வார்கள்.

ஒரு நாள் கல்கி மடத்துக்குச் சென்றிருந்தபோது, ''உங்களைப் போல் நானும் பத்திரிகைக்காரனாகிவிட்டேன்'' என்று நண்பர் சொன்னார்.

''எப்படி?''

''நான் ரொம்பவுந்தானே சேரிகளில் அலைந்து வேலை செய்து செய்து களைத்துப் போய்விட்டேனாம். அதனால் எனக்குக் கொஞ்சம் ஓய்வு கொடுப்பதற்காக 'இராமகிருஷ்ண விஜயம்' பத்திரிகையின் ஆசிரியனாக என்னைப் போட்டிருக்கிறார்கள்.''

''ரொம்ப சந்தோஷம். உங்களுக்கும் ஓய்வு வேண்டியதுதான். உங்கள் மடத்தின் பத்திரிகைக்கும் ஒரு நல்ல

○ காவி தரிக்காத துறவி அவிநாசிலிங்கம்.

○ ''அவிநாசிலிங்கத்துக்கும் எனக்கும் மற்றொரு முக்கிய விஷயத்தில் ருசி ஒற்றுமை உண்டெனக் கண்டேன். ஒட்டு மாம்பழமும் ஜாங்கிரியும் சாப்பிடுவதில் எங்களுக்குள் இருந்த ஏகோபாவம் சொல்லுக்கு அடங்காதது!''





ஆசிரியர் வேண்டியதுதான். நன்றாக நடத்துங்கள்.''

''அப்படி நடத்துவதற்கு உங்கள் உதவியும் கொஞ்சம் வேண்டும்தான்! விவேகானந்தரின் 'அவர் மதர்லண்ட்' என்கிற நூலைத் தமிழிலே ஆக்கி இந்தப் பத்திரிகையிலே தொடர்ச்சியாய் வெளியிடலாம் என்றிருக்கிறேன். நீங்கள்தான் அதை மொழிபெயர்த்துக் கொடுக்க வேண்டும்.''

''பேஷாய்ச் செய்கிறேன். உங்களுக்காக என்ன வேண்டும் என்றாலும் செய்யத் தயார்.''

'' ஊட்டியில் உள்ள எங்கள் மடத்தின் பணிகளைக் கவனிப்பதற்காக அங்கே போகப் போகிறேன். என்னுடன் நீங்களும் வாருங்கள். நம்ம மடத்திலேயே தங்கி நிம்மதியாய் இந்த வேலையைச் செய்து கொடுக்கலாம்.''

அதற்குக் கிருஷ்ணமூர்த்தி மகிழ்ச்சியுடன் இணங்கினார். தமது பாலிய நண்பருடன் தொடர்ச்சியாய்ச் சில நாட்கள் இருந்து அளவளாவவும், அதுவரை தாம் கண்டிராத நீலகிரியைக் காணவும் அது வாய்ப்பளிக்கும். மலைகளே இல்லாத மருத நிலத்தில் பிறந்து வளர்ந்த ஒருவருக்கு, குறிஞ்சிக் காட்சிகளைக் காண்பது புதுமையான, ஆனந்தமான அநுபவமாகத் தானே இருக்கும்?

நண்பர்கள் இருவரும் மூன்று வார காலம் உதக மண்டலத்தில் தங்கினார்கள். இயற்கையின் அழகுகளைக் கண்டார்கள். புத்தகம் படித்தார்கள். எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள். இடையிடையே கிருஷ்ணமூர்த்தி மொழிபெயர்ப்பு வேலையைச் செய்தார்.

விவேகானந்தரின் நூலில் முதல் அத்தியாயம் தாய்நாட்டின் மகிமை பற்றியது. தேசபக்தி பொங்கும் இதயத்துடன் அதைக் கல்கி தமிழாக்கினார்:

இப்பூவுலகில் எந்தத் தேசமேனும் புண்ணிய பூமி என்னும் பெயருக்கு உரிமையுடையதானால் அது நமது பாரத நாடேயாகும். மனித சமூகத்தின் பெருந்தன்மை, தயாளம், தூய்மை, சாந்தம் என்னும் குணங்கள் பரிபூரணம் அடைந்திருப்பதும், அக நோக்கிலும் பாரமார்த்திகத்திலும் தலை சிறந்ததுமான நாடு ஒன்று உண்டானால், அது நமது பாரத வர்ஷமேயாகும்....

இப்புண்ணிய பூமியில் சமயமும் சாஸ்திரமும் தழைத்து வளர்ந்தன. மகாபுருஷர்களுக்குப் பிறப்பளித்த தேசமும், தியாக பூமியும் நமது தாய் நாடேயாகும். பண்டைக் காலத்திலிருந்து இன்று வரை, மனித வாழ்க்கையின் மகோன்னதமான இலட்சியம் விளங்கி வந்திருப்பது இந்நாட்டிலேதான்...

கண்ணுக்குப் புலனாகாமலும், சத்தம் செய்யாமலும் வானின்றிறங்கும் இன்பப் பனித்துளியானது, அழகிற் சிறந்த ரோஜாமொட்டுக்களை மலரச் செய்கின்றது. உலகின் அறிவு வளர்ச்சிக்கு இந்தியா செய்திருக்கும் உதவியும் இத்தகையதேயாகும்....

மேலே தொடர்ந்து தமிழாக்கம் செய்கையில், ''துறவும் தொண்டும் இந்தியாவின் தேசிய இலட்சியங்கள்'' என்ற வாக்கியம் வந்தது. அதைக் கல்கி எழுதிவிட்டுத் தமது நண்பரைப் பார்த்தார்.

அப்போது கபாலீசர், அந்த அறையின் எதிர்ச் சுவரருகே பத்மாசனத்தில்



○ முத்து மகராஜ் எனப்பட்ட கபாலீச சைதன்யர்.



○ விவேகானந்தரின் நூலை மொழி பெயர்க்கும் பணியைக் கல்கியிடம் ஒப்படைத்தார் முத்து மகராஜ்.

○ "சில விஷயங்களில் அவர்களுக்கும் எனக்கும் மன ஒற்றுமை இருந்தது. ஒன்று ராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் பக்தி, மற்றொன்று சமூகத் தொண்டில் ஆர்வம்."



அமர்ந்து பிராணுயாமம் செய்து கொண்டிருந்தார். எவ்வளவு இளம் வயதில் அவர் துறவு பூண்டுவிட்டார்! அதுவும், தனித்து வாழ்வதற்காக அல்ல; தம்முடைய தனி முக்திக்காக அல்ல. தேசத்துக்கும் தேசத்தில் உள்ள எளியோருக்கும் வறியோருக்கும் தொண்டு செய்வதற்காகவே. கல்லூரியை விட்டதுமே முத்துக்கிருஷ்ணன், நூல் நூற்கவும் நெசவு செய்யவும் கற்றுக்கொண்டு, அந்தத் தொழில்களை அவர், மணல்மேட்டிலும் சுற்றுப்புறங்களிலும் கிராம மக்களுக்குக் கற்றுக் கொடுத்து, கருவிகளை வாங்கிக் கொடுத்து, பிழைப்புக்கு வழி செய்து கொடுத்தார். ஹரிஜனச் சேரிகளுக்குச் சென்று, அசுத்தத்தையும் அறியாமையையும் நீக்கப் பாடுபட்டார். 1923ல், நாகப்பட்டினத்தில் இளைஞர் காங்கிரசுக்குத் தலைமை வகித்துவிட்டுத் திரும்பிய பிறகு, பெரிய வெள்ளக் கொடுமை ஒன்று மக்களைத் தவிக்க வைத்தபோது, அவர்களுக்காக இராப் பகலாய் உழைத்தார். அப்படி உழைத்துக் கொண்டிருக்கையில், தம்மைப் போலவே பணி செய்வதற்காகச் சென்னை இராமகிருஷ்ண மடத்திலிருந்து வந்த இரண்டு சந்நியாசிகளைச் சந்தித்தார். தாம் அதுவரை தனியாகச் செய்து வந்த பணியை அவர்களுடன் சேர்ந்து, எட்டு மாத காலம் செய்தார். வெள்ளக் கஷ்ட நிவாரண வேலை முடிந்து, அந்தச் சந்நியாசிகள் சென்னைக்குப் பயணமான போது, தாமும் அவர்களைப் போல் சாமியாராய் இருக்கப் போவதாக இளைஞர் சொன்னுர். துறவு வாழ்க்கை எளிதல்ல என்பதை அவர்கள் எடுத்துச் சொன்னுர்கள். முத்து பிடிவாதம் பிடிக்கவே, நன்ருக யோசித்தபிறகு மயிலாப்பூர் மடத்துக்கு வரும்படி சொல்லிவிட்டுச் சென்ருர்கள். விரைவிலேயே முத்து அங்கே சென்று மடத்துத் தலைவர் சர்வாநந்தாவிடம் விண்ணப்பித்துக் கொண்டார். அவரைச் சர்வாநந்தர் கேள்விகள் கேட்டு அவருடைய மன உறுதியை அறிந்து கொண்டார். ஆயினும், பெற்ருேரின் சம்மதம் இன்றி அவரைச் சேர்த்துக் கொள்ள முடியாது என்று சொல்லி விட்டார். ஊருக்குத் திரும்பிய முத்து, முதலில் தாயிடம் சம்மதம் கேட்டார். ஏற்கனவே மகனின் மனப் போக்கை நன்கு அறிந்திருந்த அவர், எளிதாய்ச் சம்மதம் தந்துவிட்டார். ஆனால் தந்தையோ வீட்டுக்கு மூத்த பிள்ளை சாமியாராய்ப் போவதை எப்படிச் சகிப்பது என்று கண்ணீர் பெருக்கிப் புலம்பினுர். இறுதியில் தாயார் அவரைத் தேற்றி, பிள்ளைக்கு மகிழ்ச்சியுடன் விடை கொடுக்கும்படி செய்தார்....

பிராணுயாமம் முடிந்து, கண்ணைத் திறந்த கபாலீசர், தம்மையே கிருஷ்ணமூர்த்தி பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்து, ''என்ன இப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்று கேட்டார். தாம் எழுதியிருந்த வாக்கியத்தைக் கல்கி படித்துக் காட்டி, ''நீங்கள் துறவியாகி இதுவரை செய்துள்ளவற்றையும் இனிச் செய்யப் போவதையும் நினைத்துக் கொண்டிருந்தேன்'' என்ருர்.

''நான் என்ன பிரமாதமாய்ச் செய்துவிட்டேன். உன்னைப் போல் சிறைவாசம் செய்ய வில்லையே, செய்யத் தோன்றவில்லையே என்று நான் குறைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.''

''சிறைக்குப் போனுல்தான் உண்டா என்ன? ஏழைகளுக்கு எவ்வளவு உதவி செய்திருக்கிறீர்கள்?''

அப்போது, இளைஞர் அவிநாசிலிங்கம் அறைக்குள் வந்தார். அவர்தான் இரு நாட்களுக்கு முன்னுல், ஃபெர்ன் ஹில் ரயில்வே நிலையத்திலிருந்து கபாலீசரையும் கிருஷ்ணமூர்த்தியையும் தமது காரில் ஏற்றிக் கொண்டு மடத்தில் சேர்ப்பித்தவர். அந்த இரண்டு நாட்களில், அந்த இளைஞரைப் பற்றிய விவரங்களைத் தமது நண்பரிடமிருந்து தெரிந்து கொண்டிருந்தார் கிருஷ்ணமூர்த்தி.

''இந்த இளைஞரைத்தான் பாருங்களேன்'' என்ருர் கல்கி. ''பெரிய பணக்காரராய் இருந்தும், பணத்தால் கிடைக்கக் கூடிய சுக போகங்களை அனுபவிக்காமல், காவி தரியாத துறவியாய் இருப்பதை! ராமகிருஷ்ணருக்கும், விவேகாநந்தருக்கும் என்ன அபார சக்தி!''

தம்மை அப்படிப் புகழ்வதை அவிநாசிலிங்கம் விரும்பாமல் விலகிச் சென்றுவிட்டார்.

அந்த மடத்தில் சித்பவானந்தர் என்ற சுவாமிகளையும் கல்கி சந்தித்தார். அவர்கள் மூவரையும் பற்றி, சுமார் ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு கட்டுரையில் கல்கி சொன்னுர்:

''ஓர் உயிரும் இரண்டு உடலும்'' என்பார்களே; இங்கே இவர்கள் ஓர் உயிரும் மூன்று உடலுமாக இருந்தார்கள். அவர்களுடைய வாழ்க்கை இலட்சியங்கள் அவ்வளவு ஒன்றுபட்டிருந்தன. இந்தச் சிநேகிதர்களின் அந்நியோந்நிய வாழ்க்கையில் நான் இடையில் புகுந்தது ஓர் அபசாரம் என்றே தோன்றிற்று.

பாரமார்த்திக விசாரணை, சிருஷ்டி தத்துவ ஆராய்ச்சி, யோக சாதனம், பிராணுயாமம், மனங்குவிதல் ஆகியவைகள்

# "வறுத்து அரைத்த காபி யைப்போல் அபாரமான ருசி"

(விலையும் அதைவிட அதிகமில்லை)

ஒரு மாதமாக நாங்கள் அருந்தி வந்தது ப்ரூ என்பதை நம்ப மறுக்கிறார் என் கணவர். அதைவிட அதன் நயமான விலைதான் அவரை அதிக ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

## ஒவ்வொரு கப் ப்ரூவுக்கும் வறுத்து அரைத்த காபியின் விலையைவிட அதிகமில்லை

தலைமுறை தலைமுறையாக நாங்கள் காபித் தூளையே உபயோகித்து வருகிறோம்.

இப்பொழுது இன்ஸ்டன்ட் காபிகளில் ப்ரூ ஒன்றையே விரும்பி சாப்பிடுகிறோம். ஏனென்றால், ப்ரூவின் ருசி சிறந்த காபியின் ருசியேதான். ப்ரூ ஸ்ட்ராங்கானது, திடமானது, சிறந்த மணம் கொண்டது.

அவசரத் தேவைக்கு ப்ரூ ரொம்பவும் சௌகரியமானது. ஆறின டிகாக்ஷனை சூடுபண்ண வேண்டியதில்லை. சேதமுமில்லை. மிகச் சிக்கனமானது. சுமார் நான்கு ரூபாய்க்கு 80 கப்புக்கு மேல் ஸ்ட்ராங் காபி கிடைக்கிறது.

இன்ஸ்டன்ட் காபிகளில் நிகரற்றது ப்ரூ.




## ப்ரூ ருசி சிறந்த காபியின் ருசி

தாம் அவர்களுடைய பிரதான வாழ்க்கை இலட்சியங்கள். எனக்கோ, அரசியலில்தான் எல்லாவற்றையும்விட அதிக ருசி. அதற்குப் பிறகு சங்கீதம், நாடகம், இலக்கியம் முதலியவைகள். இவைகளிலே அவர்களுக்கு அதிக ருசி கிடையாது. ஆயினும் சில விஷயங்களில் அவர்களுக்கும் எனக்கும் மன ஒற்றுமை இருந்தது. அவைகளில் ஒன்று இராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் பக்தி; இரண்டாவது சமூகத் தொண்டில் ஆர்வம்.

அவிநாசிலிங்கத்துக்கும் எனக்கும் மற்றொரு முக்கிய விஷயத்தில் ருசி ஒற்றுமை உண்டென்று கண்டேன். ஒட்டு மாம்பழமும் ஜாங்கிரியும் சாப்பிடுவதில் எங்களுக்குள் இருந்த ஏகீக பாவம் சொல்லுக்கு அடங்காததாய் இருந்தது.

எட்டு வருஷ காலமாக என் இருதய அந்தரங்கத்தில் இருந்து வந்த ஓர் இரகசியத்தை இப்போது வெளியிடுகிறேன். இராமகிருஷ்ண மடத்தின் பேரிலேயே எனக்கு அப்போது சிறிது பொறுமை உண்டாயிற்று. ''இவ்வளவு ஒழுக்க வலிமையும், மனோதிடமும், அறிவாற்றலும், செயல் திறமையும் வாய்ந்த இளைஞர்கள் தேசிய இயக்கத்தில் ஈடுபட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்? இவர்களையெல்லாம் இராமகிருஷ்ண மடம் கொள்ளை கொண்டு போகின்றதே?'' என்று நினைத்தேன். முக்கியமாக அவிநாசிலிங்கத்தைப் பற்றி இத்தகைய எண்ணம் எனக்கு வெகு பலமாயிருந்தது.

(ஆ.வி. 4-11-34)

கல்கியின் இந்த மனக் குறை தீரவே செய்தது. அவிநாசிலிங்கம் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டார்; சிறை புகுந்தார். அரசியலில் ஈடுபட்டார். கல்வி அமைச்சரானார். அந்தப் பதவி வகிக்கையிலும், முன்னும் பின்னும் சிறப்பாய்க் கல்வித் தொண்டு புரிந்தார்.

கபாலீசரும் கல்கி மகிழும்படி சாதனைகள் புரிந்தார். அவற்றைக் கவனிப்பதற்கு முன்னால், தம்மையும் அவரையும் ''வேற்றுமை''ப்படுத்தி, இன்னும் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அவர் எழுதிய சில வாக்கியங்களைப் பார்ப்போம்:

நான் அரசியல் தலைவர்களின் குணாதிசயங்களைப் பற்றி ஆராய்ந்து கொண்டிருக்கையில், அவர் சகுண நிர்க்குணப் பிரம்மங்களின் இயல்புகளைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறார். உத்தியோகம் ஏற்பதா உத்தியோகம் மறுப்பதா என்ற சண்டையைப் பற்றி நான் ஆராய்ந்து கொண்டிருக்கையில், அவர் மௌனமாகத் தேசத் தொண்டு செய்து வருகிறார். ''நேற்றுப் பாடிய பாகவதர் காம்போதியில் கேதார கௌளத்தைக் கலந்தது ஏன்'' என்று நான் சிந்தித்துக் கொண்டிருக்கையில், அவர் ஏதோ இஷ்டமான ராகத்தில் தாயுமானவரின் பக்தி ததும்பும் பாடல்களைப் பாடி ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார். டாக்கி நட்சத்திரங்களின் முக லாவண்யத்தின் தராதரத்தைப் பற்றி நான் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில், அவர் ஜகன் மாதாவின் தெய்வீக சௌந்தரியத்தில் உள்ளம் பறிகொடுத்து உருகி நிற்கிறார். நான் எனது சொந்த மனைவி மக்கள், உற்றார் உறவினரின் இன்ப துன்பங்களைப் பற்றி எண்ணமிடுகையில், அவர் சேரியில் உள்ள ஹரிஜனக் குழந்தைகளின் க்ஷேம லாபங்களைப் பற்றிச் சிந்திக்கிறார்; அவர்களை அழைத்து வந்து கல்வி புகட்டுகிறார். (ஆ. வி. 1-3-36)

''தெற்கு மாகடலுக்கு நடுவினிலே அங்கோர் கண்ணற்ற தீவு'' என்று பாரதியார் வர்ணித்த ஃபிஜித் தீவுக்கு, 1939யில், சுவாமி ருத்ரானந்தர் பணியாற்றச் சென்றார். அவ்வளவு தொலைவுக்கு நண்பர் பிரிந்து செல்வது கல்கிக்குப் பெரிதும் வேதனையாய் இருந்தது. மனம் சஞ்சலப்பட்ட போதெல்லாம், மயிலாப்பூர் மடத்துக்கு அவர் சென்று நண்பர் முகத்தைப் பார்த்தும் மொழியைக் கேட்டும் ஆறுதல் அடைவதுண்டு. ''எம்பா'' என்று பால்ய நட்பைக் கொண்டு அவர் கூப்பிட்டாலே போதும், தம் சங்கடம் எல்லாம் தீர்ந்து போனதாகக் கல்கி உணர்வார். அப்படிப் பட்டவர் கடல் கடந்து வெகுதூரம்

## மோகம் முப்பது நாள்?

ஆங்கிலத்தில் 'ஸெவன் இயர் இச்' (Seven Year Itch) என்பதாகச் சொல்வார்கள். அதாவது கல்யாணமாகி ஏழு ஆண்டுகளுக்குப் பின் கணவனின் கண்கள் சுற்றி அலையுமாம்; மனத்தில் சபலம் ஏற்படுமாம்! தமிழிலோ 'மோகம் முப்பது நாள்' என்பார்கள். ஆனால் இதைப் பொய்யாக்கிக் கொண்டு எத்தனையோ தம்பதிகள் கல்யாணமான தினத்திலிருந்து அன்யோன்யமாக வாழ்ந்து வருகிறார்கள். பத்து ஆண்டுகளுக்கு அதிகமாக மண வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள கணவன்மார்களைத் தங்கள் அன்பு மனைவி பற்றிக் கல்கியில் அரைப் பக்க அளவில் எழுதக் கோருகிறோம். உங்கள் மனைவியை எதனால் விரும்பினீர்கள், இன்றும் காதலிக்கிறீர்கள், இனியும் நேசிப்பீர்கள் என்பது பற்றிக் கூறுங்கள். தம்பதியின் சமீபத்திய புகைப்படமும் அனுப்பலாம்.

பிரசுரமாகும் கட்டுரைகள், படங்களுக்குச் சன்மானம் உண்டு. பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. கடிதப் போக்குவரத்துக் கிடையாது. முடிவு தேதி ஜனவரி 23ந் தேதி. உறையின் மேல் ''முப்பது நாளா?'' எனக் குறிப்பிடவும். -ஆசிரியர், கல்கி, சென்னை-31.



செல்கிறார் என்றால்? ஆயினும், தமது நண்பர் அத்தீவில் செய்ய வேண்டியிருந்த பணிகளை எண்ணி, தமது மனத்தைத் தேற்றிக் கொண்டார். நெஞ்சம் நெகிழ அவரை வழியனுப்பி வைத்தார்.

ஃபிஜி போய்ச் சேர்ந்த ருத்ரானந்தர் நந்தி என்ற ஊரில் ஏற்கனவே அமைந்திருந்த இராமகிருஷ்ண மடத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். அங்கிருந்தபடியே மளமளவென்று அவர் செய்த பணிகள் பற்றிக் கல்கிக்குக் கடிதங்கள் மூலமும் பத்திரிகைச் செய்திகள் மூலமும் தகவல்கள் எட்டிக் கொண்டிருந்தன. அங்குள்ள இந்தியர்களுக்காகப் பல பள்ளிக்கூடங்களும் பஜனை மடங்களும் அமைத்தது, ருத்ரானந்தர் செய்த முதற் பணி. இரண்டாவதாக அவர் செய்த பணி, மிகப் பெரிய பணி, அங்குள்ள இந்தியப் பாட்டாளிகளின் உரிமைகளுக்காகப் போராடி, அவர்களுடைய நிலைமையை மேம்படுத்தியது. அதுபற்றி தாம் அடைந்த மகிழ்ச்சியைக் கல்கி, தமது சொந்தப் பத்திரிகையின் இதழ் ஒன்றின் அட்டையில் ருத்ரானந்தரின் படத்தைப் போட்டும், விளக்கக் குறிப்பு ஒன்று எழுதியும் வெளியிட்டார்.

பாரத நாட்டில் அவ்வப்போது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமி விவேகானந்தர் போன்ற மகான்கள் அவதரித்து இந்நாட்டுக்குப் ''புண்ணிய பூமி'' என்னும் புகழ் பொருந்தும் என்பதை நிலைநாட்டிச் செல்கிறார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஆத்மசக்தியின் துணை கொண்டு சுவாமி விவேகானந்தர் ஆரம்பித்த பாரமார்த்திகத் திருப்பணியை வாழையடி வாழையாக இன்றைக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த துறவிகள் நாடெங்கும் நடத்தி வருகிறார்கள். அவர்களில் ஒருவரான சுவாமி ருத்ரானந்தரின் திருவுருவப் படம் இந்த இதழ் அட்டையில் விளங்குகிறது.

இந்த யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்பு கடல் கடந்து பல்லாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள ஃபிஜித் தீவில் வாழும் ஏழைத் தொழிலாளி இந்தியர்களுக்குத் தொண்டு செய்யச் சென்றார். இன்றளவும் அந்தக் 'கண்ணற்ற' தீவில் இருந்து தொண்டு செய்து வருகிறார். (கல்கி இதழ் 18—6—44)

இந்தக் குறிப்பு வெளியான அதே சமயம், ஃபிஜித் தீவில் தொழிலாளர் போராட்டம் ஒரு தீவிர கட்டத்தை அடைந்தது. அது பற்றி, அடுத்த இதழில் கல்கி எழுதிய குறிப்பு:

ஃபிஜியில் கரும்புப் பயிர் செய்கிறவர்கள் பெரும்பாலும் இந்தியர்கள். அவர்களுடைய கரும்பை யெல்லாம் வாங்கிச் சர்க்கரையாக்கி ஏற்றுமதி செய்கிறவர்கள் ஒரு ஐரோப்பிய கம்பெனியார். இந்தக் கம்பெனியார் என்ன விலை குறிப்பிடுகிறார்களோ அந்த விலைக்கே அவர்களுக்குக் கரும்பைக் கொடுத்தாக வேண்டும். யுத்தம் ஆரம்பித்த பிறகு உலகெங்கும் எல்லாப் பொருள்களின் விலையும் ஏகமாய் உயர்ந்திருந்தும், ஃபிஜி கரும்பு விலை மட்டும் உயரவே இல்லையாம். கரும்பு பயிரிடுவோர் எவ்வளவோ மன்றாடியும் பிரயோஜனமில்லாமல் போகவே அவர்கள் முன்னதாகவே நோட்டீஸ் கொடுத்துவிட்டு, சென்ற பசலியில் விளைந்த கரும்பை யெல்லாம் தீவைத்துக் கொளுத்தி விட்டார்களாம்...

(சுவாமி ருத்ரானந்தரை) மேற்கூறிய கரும்புத் தகராறிலே சடுபடுத்தி, ஃபிஜி சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொண்டதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. பின்னர், ஹைகோர்ட்டார் சுவாமிகளைக் குற்றமற்றவர் என்று கண்டு விடுதலை செய்துவிட்டார்களாம். ஃபிஜி சர்க்கார், சுவாமிகள் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கருதியதே அவருடைய தொண்டின் சிறப்புக்குத் தக்க அத்தாட்சியாகும். நமது செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த துறவி ஒருவர், பல்லாயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள கண்ணற்ற தீவில் வாழும் இந்திய சகோதரர்களுக்கு அத்தகைய அரிய திருப்பணி செய்து வருகிறார் என்பது நமக்கு அளவற்ற பூரிப்பை அளிக்கிறது.

அதற்கு ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு 1950ல், சுவாமி ருத்ரானந்தர், தாய் நாட்டில் சிறிது காலம் தங்கி இருப்பதற்காக வந்தார். அவருடைய வருகையை முன்னிட்டு மயிலாப்பூர் இராமகிருஷ்ண மடத்தார் செய்த வரவேற்பு ஏற்பாடுகளில் உற்சாகத்துடன் கல்கி ஒத்துழைத்தார். அந்த ஏற்பாடுகள் பற்றிய பேச்சு வார்த்தையின்போது, மடத்தார்கள் ருத்ரானந்தரைப் பிரியத்துடன், அவருடைய பூர்வாசிரமச் செல்லப் பெயரையொட்டி, 'முத்து மகராஜ்' என்று குறிப்பிட்டார்கள். பரமஹம்ஸரைக் 'குரு மகராஜ்' என்று குறிப்பிடுவது போல, தமது பாலிய நண்பரையும் அந்தப் பட்டத்துடன் அவர்கள் குறிப்பிட்டதை அறிந்து கல்கிக்கு ஆனந்தம்.

கல்கத்தா வழியாகச் சென்னைக்கு வந்த ருத்ரானந்தரை வரவேற்க, மத்திய ரயில்வே நிலையத்தில் பல அன்பர்கள் கூடியிருந்தார்கள். அவர்களுடன் இருந்த கல்கி, ''முத்துமகராஜ்'' என்று பெருமையுடன் சொல்லியே, நண்பருக்குப் பூமாலை சூட்டினார். (தொடரும்)

---

குறிப்பு: சில மாதங்களுக்கு முன் ஃபிஜியிலிருந்து வந்து மயிலாப்பூர் மடத்தில் ருத்ரானந்தர் தங்கியிருந்தபோது அவருடன் மூன்று நாட்கள் உரையாடி நூலாசிரியர் கல்கியின் பாலிய, இளமைப் பருவங்கள் பற்றிப் பல சுவையான தகவல்களைச் சேகரிக்க முடிந்தது.

# மூக்கையாத்தேவர் எம்.பி

தலைவர் தரிசனம்-2

## சொல்பவர்: ஏ.ஆர்.பெருமாள்.எம்.எல்.ஏ.

நெல்லை மாவட்டத்திலுள்ள ஸ்ரீவைகுண்டத்துக்கு அருகில் ஒரு சிறிய கிராமம். பிரதான ரஸ்தாவிலிருந்து சுமார் ஆறு பர்லாங் தூரத்தில் அமைந்திருக்கிறது. சில வருஷங்களுக்குமுன் பசும் பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் விஜயம் செய்வதற்கான ஏற்பாடுகளை அந்தக் கிராம மக்கள் உற்சாகத்துடன் கவனித்தார்கள். அந்த ஆறு பர்லாங் தூர கிளை ரஸ்தாவில் மல்லிகை மலர்களையும் ரோஜா இதழ்களையும் மெத்தென்று பரப்பி, அதன் மேல் முத்துராமலிங்கத் தேவர் நடந்து வரவேண்டும் என்ற ஆசை அந்தக் கிராம மக்களுக்கு. தேவரிடம் அவர்களுக்கு அத்தனை ஈடுபாடு, பக்தி, மரியாதை.

ஆனால் கிராமத்தார்களின் ஆசை நிறைவேறவில்லை. தேவர் அந்தப் பிரயாணத்தை மேற்கொள்ள முடியவில்லை. சீக்கிரமே அமரராகியும் விட்டார்!

சில காலம் கழித்து அதே கிராமத்துக்கு மூக்கையாத் தேவர் வருகை தருவதாக இருந்தது. அந்த ஊர் மக்கள், நிறைவேறாமற் போன பழைய ஏற்பாட்டை மீண்டும் நடத்திக் காண்பித்தார்கள்.

''பசும்பொன் தேவர் எங்கே? நான் எங்கே? நான் அவருடைய பாத தூசிக்குச் சமானம்! அவருக்காக நீங்கள் செய்ய நினைத்திருந்த இந்த மரியாதை வரவேற்பில் நான் காலடி எடுத்து வைப்பது அபசாரம்'' என்று சொன்னார் மூக்கையாத் தேவர்.

காத்திருந்த கிராமவாசிகளில் முதியவராகிய ஒரு பெரியவர் முன் வந்து, ''ஐயா! நீங்கள்தான் தேவரின் ஆன்மீகத்துக்கும் அரசியலுக்கும் வாரிசு! தேவருக்குப் பிற்காலத்தில் உங்களை நாங்களெல்லாம் அவருடைய அடையாளச் சின்னமாகத்தான் பார்க்கிறோமே ஒழிய வேறு தனி மனிதராகப் பார்க்கப் பழகவில்லை. நீங்க இப்போ இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொள்ளவில்லை என்றால், நான் கீழே விழுந்து உங்கள் காலைப் பிடித்துக் கொண்டு எழுந்திருக்க மாட்டேன்'' என்று சொல்லிக் கொண்டே குனிந்தார்.



மேலே: முத்துராமலிங்கத் தேவரின் ஆன்மீக, அரசியல் வாரிசு.

ஓவியம்: திரு. பெருமாள்

மூக்கையாத் தேவர் பதறிப் போனார். அந்த முதியவரின் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''என்னை மேலும் அபசாரம் செய்ய வைத்து விடாதீர்கள். நான் என் ஆசானின் பாத தூளி. இன்று என் ஆசான் இந்த மலர்ப் பாதையில் நடந்தால் அவருடைய பாத தூளிகள் அங்கு படுமல்லவா! அந்த நினைவிலேயே உங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்கிறேன்'' என்றார்.

1952ம் ஆண்டு பொதுத் தேர்தல் நடக்கவிருந்த சமயத்தில் முத்துராமலிங்கத் தேவர் அவர்கள், காத்திக் கிராமத்தில் சமூகசேவை செய்துகொண்டிருந்த இளைஞர் மூக்கையாவை வரவழைத்து ஃபார்வர்ட் பிளாக் வேட்பாள



ராகச் சட்டமன்றத்துக்கு நிற்கச் சொன்னார். அப்போதுதான் அவரை முதல் தடவையாகச் சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. அப்போது அவரை எல்லோரும் மூக்கையா என்றுதான் அழைப்பார்கள்.

முத்துராமலிங்கத் தேவரின் மறைவுக்குப் பிறகு, அவருடைய ஆன்மீகத்துக்கும் அரசியலுக்கும் வாரிசாகத் தொண்டர்கள் அவரை ஏற்றுக் கொண்டபோது, மூக்கையாத் தேவர் என்று ஒருவித கனிவு கலந்த மரியாதையுடன் குறிப்பிட ஆரம்பித்தார்கள்.

முத்துராமலிங்கத் தேவர் அவர்கள் தேர்தல் களத்தில் தம் வாரிசை அறிமுகப்படுத்திய வேளை நல்ல வேளை. அப்புறம் எந்தத் தேர்தலிலும் பெரும் எண்ணிக்கை வித்தியாசத்தில் வோட்டுக்களைப் பெற்று வெற்றி பெற்றார். 1971ம் ஆண்டு தேர்தலில் பாராளுமன்றத்துக்கும், தமிழ் நாடு சட்டசபைக்கும் ஒரே நேரத்தில் போட்டியிட்டு

இரண்டிடங்களிலும் வெற்றி பெற்றுப் பிறகு சட்ட சபை இடத்தை ராஜிநாமாப் பண்ணினார்.

மூக்கையாத் தேவர் மதுரைக் கல்லூரியில் படித்தவர். திரு மகாதேவன் முதல்வராக இருந்த காலம். கல்லூரி நாட்களிலேயே சமூக சேவையில் நிறைய ஈடுபாடு. மாணவர்களுக்கு வெவ்வேறு உணவு விடுதிகள் இருக்கக் கூடாது என்று பெரிய போராட்டமே நடத்தி வெற்றி பெற்றிருக்கிறார். பல விளையாட்டுக்களிலும் சூரர்.

இவருக்கு ரொம்ப இளகிய மனம். ஒரு சந்தர்ப்பத்தில் நாங்குநேரியை அடுத்த வள்ளியூரில் ஒரு பொதுக்கூட்டத்துக்கு ஏற்பாடாகியிருந்தது. நானும் இவரும் காரில் போய்க் கொண்டிருந்தோம். நாங்குநேரியை அடையுமுன்பே, பாதை ஓரத்தில் ஒரு வயோதிக ஆசாமி விழுந்து கிடப்பதை இவர் பார்த்துவிட்டார். காரை நிறுத்தச் சொல்லிக் கீழே இறங்கிப் போய்ப் பார்த்தார். அந்தக் கிழவன் பசி மயக்கத்தில் துவண்டு போய் விழுந்திருந்தான். காரோட்டியிடம் பணம் கொடுத்து நாங்குநேரிக்குப் போய் உணவு வாங்கிக் கொண்டு வரச் சொன்னார். அந்த உணவு வந்து, அந்தக் கிழவன் சாப்பிட்டு, அவன் முகம் மலர்வதைக் கண்ட பிறகுதான் எங்கள் கார் வள்ளியூரை நோக்கிப் புறப்பட்டது. நிகழ்ச்சிக்கு இரண்டு மணி நேரம் தாமதமானாலும் அந்த ஏழையின் வயிறு நிறைந்ததை நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தார்.

சுபாவம் அப்படி. உதவி கேட்டு வருபவர் தெரிந்தவராக இருந்தாலும் சரி, தெரியாதவராக இருந்தாலும் சரி, தம்மால் முடிந்ததை எடுத்துக் கொடுத்துவிடுவார். அந்த நேரத்தில் தம்மிடம் ஏதும் இல்லை என்றால், அவருடன் பேசிக் கொண்டிருக்கும் நண்பர்களிடமிருந்து தாற்காலிகமாகக் கடன் வாங்கியாவது கொடுத்துவிடுவார். யார் மீதாவது குறை கண்டால், நேரடியாகக் குற்றம் சாட்டிப் பேசமாட்டார். மற்றவர்கள் மூலம் நயமாக எடுத்துச் சொல்லித்திருத்த முயற்சிசெய்வார்.

அவருக்குக் காவி உடை, சிவச் சின்னம் அணிந்தவர்களிடம் அபார ஈடுபாடு, மரியாதை. எந்த சாமியாரையும் உபசரிக்க ஆரம்பித்து விடுவார்.

மதுரை வட்டாரத்தில், கல்லூரியில் இடம் தேடி வருபவர்கள் எல்லோருமே இவரை நாடி வருவது சகஜம். இவரும் சளைக்காமல் அத்தனை பையன்களையும் கூடவே அழைத்துக் கொண்டு போய் ஒவ்வொரு கல்லூரியாக நுழைந்து கிடைக்கும் இடங்களில் மாணவர்களை நுழைத்துவிட்டு வருவார். இதற்காக அந்த மாணவர்கள் கூட்டத்துடன் 'லாரி'யில்கூடப் பிரயாணம் செய்ததுண்டு.

1967ம் ஆண்டுக்குமுன், அந்தப் பகுதியில் பிரசித்தமான பழைய கேடி விட்டி பெரிய கருப்பத் தேவன் என்பவரின் மகனுக்கு, எந்தக் கல்லூரியிலும் இடம் கிடைக்கவில்லை. பையன் மூன்று நான்கு தடவைகள் எஸ்.எஸ்.எல்.சி. எழுதினவன். மூக்கையாத் தேவரும் முனைந்துதான் பார்த்தார். முடியவில்லை. இதை இவர் ஒரு சவாலாகவே எடுத்துக் கொண்டார். அதையே ஒரு தேர்தல் பிரச்னையாக வைத்தார். அடுத்த ஆண்டே பசும் பொன் முத்துராமலிங்கத் தேவர் கல்லூரி உசிலம்பட்டியில் தோன்றியது. பெரிய கருப்பத் தேவன் மகன் அந்தக் கல்லூரியில் சேர்ந்து அடுத்த ஆண்டில் பி.யூ.சி பரீட்சையில் நல்ல மார்க்குகள் வாங்கி வெற்றி பெற்றான்.

இதைத் தொடர்ந்து கமுதி, நெல்லை மாவட்டத்திலுள்ள மேல நீலிதநல்லூர் போன்ற இடங்களில் பசும் பொன் முத்துராமலிங்கத் தேவர் பெயரிலேயே கல்லூரிகளைத் திறக்க வழி செய்தார். அவர் சொல்வது போல் எல்லாமே 'நரி ஓடும்' கிராமப் பகுதிகள். கிராமவாசிகள் அநாவசியமாகப் பட்டினங்களுக்குப் பையன்களை அனுப்பிப் பொருளாதார ரீதியில் அல்லல்படக் கூடாது என்பதுதான் அவருடைய முக்கிய நோக்கம். குறைவான மார்க்குகளை வாங்கி எஸ்.எஸ்.எல். சி. பரீட்சையில் தேறியிருப்பவர்களை இரு கைகளையும் நீட்டி வரவேற்று இடம் கொடுத்துக் கல்வியையும் கண்டிப்பான வாழ்க்கை அமைப்பையும் கொடுப்பதுதான் இந்தக் கல்லூரிகளின் குறிக்கோள். அநேகமாக அத்தனை மாணவர்களுக்குமே, உபகாரச் சம்பளமோ இலவச உணவோ கிடைக்க வழி செய்திருக்கிறார்.

இதைத் தவிர மதுரைப் பிராந்தியத்தில், ஹாஸ்டல்களுடன்கூடிய தொழிற்பயிற்சிப் பள்ளிகள் பலவற்றையும் நிறுவி, அவைகளில் பயிற்சி பெற்று வரும் மாணவர்களுக்குப் பல தொழில் நிறுவனங்களில் இவரே சிபாரிசு செய்து வேலையையும் வாங்கிக் கொடுத்துவிடுவார்! இந்த வகையில் இப்போது மூவாயிரம் பேருக்கு அதிகமாகவே இவர் பெயரை எப்போதும் நினைவில் தாங்கித் தொழிலாளிகளாக இருக்கிறார்கள்.

முத்துராமலிங்கத் தேவருடன் தமிழகத்தில் 'ஃபார்வர்ட் பிளாக்' கட்சியும் மறைந்துவிடும் என்று பலர் ஆருடம் சொன்னார்கள். முத்துராமலிங்கத் தேவரின் ஆஸ்திக்கும் அரசியலுக்கும் தாங்கள்தான் வாரிசு என்று யார் யாரோ சொல்லிக் கொண்டார்கள். இவை எல்லாவற்றையும் தொண்டர்களின் அன்புத் துணை கொண்டு பொய்யாக்கிக் காட்டினார் மூக்கையாத் தேவர். இன்று அவர் அகில இந்திய ஃபார்வர்ட் பிளாக் கட்சித் தலைவர்.

முத்துராமலிங்கத் தேவர் மறைந்து ஓர் ஆண்டு நிறைந்தபோது, அவருடன் சொந்தம் கொண்டாடிய வேறு சிலர் குரு பூஜைக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அதில் மூக்கையாத் தேவர் கலந்து கொள்ளக் கூடாது என்று தடை உத்தரவும் வாங்கி வைத்தார்கள். அந்தத் தடையை மீறி இவர் கைதானார். ஜெயிலுக்கும் போனார். அடுத்த ஆண்டு முதல் குரு பூஜையை நடத்தும் வாய்ப்பு இவரையே தேடி வந்து விட்டது.

ஆன்மீகத் துறை ஆராய்ச்சியில் நிறைய ஈடுபாடு கொண்டவர். அரசியலில் எளியவர். அன்பில் பெரியவர். அமைதியின் இருப்பிடம். இரைந்து பேச மாட்டார். பேசுவதை இனிமையாகப் பேசுவார்.

கேட்டு எழுதியவர்: **கோமதிசுவாமிநாதன்**

தானிருப்பதையே
நினைவுறுத்தாது
தன்னிகரற்ற நிம்மதி தரும்..
அதுவே கம்:பிட், சானிடரி
டவலின் தனிச் சிறப்பு

பெண்ணென்று சொன்னாலே பெருந்துன்பம் சில நாளில்; கம்:பிட் ஒன்றுதான் கவலையை மறக்கச் செய்யும். பத்துமடங்கு ஈரத்தைப் பாங்காக உறிஞ்சும்...மற்றவற்றைவிட ஐந்துமடங்கு அதிவிரைவில். மென்மையோ மென்மை...முன்னே முட்டி நிற்காது, பின்னால் கலைந்தெறியும் தொல்லையில்லை—காரணம், நீரிலே கரைத்து விடலாம் நிம்மதியாக. அதுவே கம்:பிட்!

கம்:பிட் சானிடரி டவல் கவலையை மறந்து களிப்புடன் இருக்கச் செய்யும்!




கிறிஸ்டியன் ஹேறாடன் (இந்தியா) லிட்., கோர்த்தாலிம், கோவா கம்பெனியின் தரமான தயாரிப்பு.

AIYARS-CH.4 TM

# இருக்கிற செல்வமும் கெடுக்கிற அரசியலும்!







சங்கீத விழாதான் ஜனவரி நாலாம் தேதி வரை நீடிக்கிறதோ என்று எண்ணுகிற மாதிரி சனிக்கிழமை மாலை பால்கிவாலா அவர்களின் சொற்பொழிவு விறுவிறுப்பான ஒரு கச்சேரி போல் அத்தனை சுவாரஸ்யமாக இருந்தது. கூட்டமாவது கூட்டம்! அபட்ஸ்பரியில் நடந்த எந்தப் பெரியமனிதர் வீட்டுக் கல்யாணத்துக்காவது இத்தனை கூட்டம் வந்திருக்குமா என்பது சந்தேகம். நிதி நிர்வாக, ஆராய்ச்சி நிறுவனம், ஜி. எல். மேத்தா நினைவாக ஏற்பாடு செய்திருந்த இந்தச் சொற்பொழிவை அமர இடமின்றி ஒன்றரை மணி நேரத்துக்கு மேல் நின்றுகொண்டே ஆர்வத்துடன் கேட்டவர் ஏராளம்.

'சுதந்திரத்துக்குப் பின் இந்தியா' என்பது சொற்பொழிவின் தலைப்பு. இந்தியா முன்னேறித்தான் இருக்கிறது என்பதை ஒப்புக்கொண்ட பால்கிவாலா, முன்னேற்றத்தின் அளவுகோல் அவரவர் மன நிலையைப் பொறுத்தது என்பதையும் தெளிவுபடுத்தினார்.

நாமே ஓர் உதாரணம் பார்க்கலாம். ரிக்ஷா இழுத்துக் கொண்டிருந்த ஷிராஜ் பாய் இன்று இருபது லட்சம் பெறுமானமுள்ள தொழிலகங்களின் அதிபதியாக இருக்கிறார் என்பதை நாளிதழ்களில் சில தினங்களுக்கு முன் பார்த்தோம். பாங்கிலிருந்து கிடைத்த உதவியுடன் கடினமான உழைப்பும் சாமர்த்தியமும் இணைந்தபோது நிகழ்ந்தது இந்தச் சாதனை. மற்றொரு ரிக்ஷா இழுப்பவர் இன்று ஓர் ஆட்டோ ரிக்ஷாவின் அதிபராகி யிருக்கலாம். முன்னதும் முன்னேற்றம்தான், பின்னதும் முன்னேற்றம்தான். ஷிராஜ் பாய் அடைந்த முன்னேற்றத்தைப் போல் இந்த நாடே உயர வேண்டும் என்று மக்கள் ஆசைப்பட்டால் அதில் தவறில்லை. அத்தகைய முன்னேற்றங்கள் ஏற்பட முடியும் என்பதை ஜப்பானும் மேற்கு ஜெர்மனியும் நிரூபிக்கின்றன.

அங்கு நிகழ்ந்தவற்றை அற்புதங்கள் என்று சிலர் வர்ணிப்பது தவறு எனச் சுட்டிக் காட்டினார் பால்கிவாலா. அற்புதங்கள் எங்கும் நிகழ்வதில்லை. கர்மா என்கிறோமே அதுபோல் நிகழ்காலத்திலும் செய்கிற காரியங்கள், எடுக்கிற முடிவுகள் ஆகியவற்றின் பலன்களையே அனுபவிக்கிறோம். ஆற்றல் மிக்க செயல் அதிகமான நற்பலனை விளைவிக்கிறது.

சுதந்திர பாரதத்தின் மிகப் பெரிய குறை ஆட்சியில் உள்ளோர் நம்மிடமுள்ள செல்வங்களை ஆற்றலுடன் பயன்படுத்திக் கொள்ளாததுதான் என்ற பால்கிவாலா அந்தச் செல்வங்களைப் பட்டியல்போட்டுத் தந்தார்.

அறிவுச் செல்வத்துக்குப் பாரதத்தில் பஞ்சமே கிடையாது. அரசாங்கக் கணக்குப்படியே எத்தனையோ ஆயிரம் இந்திய விஞ்ஞானிகள், பொறி இயல் நிபுணர்கள், அயல் நாடுகளில் தங்கள் ஆற்றல்களைக் காட்டி வருகிறார்கள். அவர்களை இங்கு தருவித்து நல்லபடியாகப் பயன்படுத்திக்கொள்ள நமக்குத் தெரியவில்லை. அதுபோக இங்கே மிச்சம் மீதி இருக்கிற அறிஞர்களையாவது நிரம்பட உபயோகித்துக் கொள்கிறோமா என்றால் அதுவுமில்லை.

பாரதத்தின் அண்மையில் உள்ள நாடுகள் பலவற்றில் இன்னும் நாற்பது அல்லது அறுபது ஆண்டுகளுக்கு நிலக்கரி தட்டுப்பாடு இல்லை என்று எண்ணி மகிழ்கிறார்கள். ஆனால் நமது நாட்டிலோ இன்னும் ஆயிரம் ஆண்டுகளுக்குத் தேவையான நிலக்கரி இருக்கிறது. அப்படி இருந்தும் அனல் மின் நிலையங்கள் பலப் பல நிறுவி மின் உற்பத்தி செய்யாமல் இருந்துவிட்டோம். தொழிலகங்களைப் பெருக்கிவிட்டு இப்போது மின் வெட்டுக் கொணர்ந்து தடுமாறுகிறோம்.

பருவ மழை பொய்த்தது, அதனால் விளைச்சல் குறைந்தது, பஞ்ச நிலை ஏற்பட்டது என்று யாராவது இருபது வருஷங்களுக்கு முன் கூறினால் அதை நியாயம் என ஏற்கலாம். ஆனால் 1975ல் அப்படிச் சொல்வது அபத்தம். ஏனெனில் விஞ்ஞான முன்




**ஃபோர்ட் கார்ட்டூனா? அம்பேல் !**

அமெரிக்க ஜனாதிபதி ஃபோர்டை எப்படியெல்லாம் கார்டூன் போடலாம்?

ரைட் (Wright) என்ற கார்ட்டூனிஸ்ட் போட்டுப் பார்த்திருக்கிறார். கடைசியில் எப்படிப் போட்டாலும் திருப்தி காணுதவராகத் தோல்வியை ஒப்புக் கொள்கிறேன் என்று பொருள்பட (I quit) என்று எழுதியுள்ளார்! - நியூஸ் வீக் - பாலி



'' நான் உங்களுடன் ஒரு பந்தயம். வருகிறீர்களா ?''

'' என்ன சொல்லு ?''

'' நான் சினிமா க்யூவில் நிற்கிறேன். நீங்கள் ரேஷன் க்யூவில் நில்லுங்கள். யார் முதலில் வீடு திரும்புகிறீர்கள் என்று பார்க்கலாம் !''

னேற்றம் அந்த அளவுக்கு இன்று ஏற்பட்டுள்ளது. பொலிவியா நாட்டில் பருவ மழை மலைத் தொடரின் ஒரு பக்கத்தில் பெய்து வந்தது. மறு புறத்தில் மழையே இராது. வறண்ட பூமி. அந்நாட்டு விஞ்ஞானிகள் ஒரு புறத்தில் பெய்யும் மழையைத் தேக்கி மலைத் தொடரின் மறு பக்கத்துக்குக் கொண்டு செல்வதில் வெற்றி பெற்றுர்கள். பாலைவனம் சோலைவனமாயிற்று.

இந்தியாவில் பருவ மழை பொய்த்தால் என்ன? ஜீவ நதிகள் இல்லையா? கடலில் போய் வீணுகும் நீரைக் கொண்டு லட்சக் கணக்கான ஏக்கர்களைப் பயிர் செய்யலாமே? அது போக பூமி மட்டத்துக்கு அடியில் உள்ள நீரும் எத்தனையோ ஆயிரம் ஏக்கர்களைப் பயிர் செய்யப் போதுமானது. இவற்றைச் சரிவரப் பயன் படுத்திக் கொள்ள முடியாமல் தடுப்பது என்ன? அரசியல்தான். எந்த ஓர் அரசியல்வாதியாவது இன்று தைரியமாகத் தமது மாநில மக்களைப் பார்த்து இந்த நதி நமக்கு மட்டும் சொந்தமல்ல; பாரதத்தின் பொதுச் சொத்தாகக் கருத வேண்டும் என்று கூறுவாரா? எதை எதையோ தேசியமயமாக்கும் அரசு நதிகளை ஏன் தேசிய மயமாக்கக் கூடாது? எந்த மாநிலத் தலைவராவது இன்று தமது மக்களைப் பார்த்து அண்டை மாநிலத்தவருக்கு வேலை வாய்ப்பு இல்லை என்று நாம் கூறக் கூடாது என்று அடித்துச் சொல்கிருரா? போதாக் குறைக்கு எல்லைத் தகராறு வேறு. இந்தியாவின் ஓர் அங்கமாயுள்ளவரை சில சதுர மைல் பிரதேசம் எந்த மாநிலத்தைச் சேர்ந்ததாயிருந்தால் என்ன? இவை எல்லாம் சுயநல அரசியலின் விளைவுகள்தாமே?

நமது செல்வங்களில் மற்றொன்று ஜனத் தொகை. அந்த மனித சக்தியை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் திட்டமிடாதது பெருந் தவறு. வரி வருமானம் எவ்வளவு, கிடைக்கக் கூடிய கடன் எவ்வளவு என்று கணக்குப் பார்த்துப் பல்வேறு இனங்களுக்கு நிதி ஒதுக்குவது திட்டம் அல்ல. என்னென்ன செய்தால் மனித சக்தியை முழுமையாகப் பயன்படுத்திக்கொள்ளலாம், வேலை வாய்ப்புக்களைப் பெருக்கலாம் என்று திட்டமிடுவதே சிறந்தது. வேலையில் அமரும் மக்களும் நான் இவ்வளவு தூரம் உழைத்ததால் நாட்டுக்கு நன்மை புரிந்தேன்; அதற்குரிய வருமானம் பெறுவேன் என்று திருப்தியடைய வேண்டுமே ஒழியப் பேராசைப்படலாகாது.

மற்றொரு செல்வம் காலம். போனுல் வராத விஷயம். ஒவ்வொரு நிமிஷத்தையும் பயனுள்ளதாகச் செலவிட நாம் கற்க வேண்டும். விமான தளங்களிலும் ரயில் பிளாட்ஃபாரங்களிலும் மக்கள் விரயமாக்க நேருகிற காலம் எவ்வளவு என்று யோசித்துப் பாருங்கள். ஒரு விமானம் புறப்பட ஒரு மணி நேரம் தாமதமானுல் அதில் பயணம் செய்கிற அறுபது பேருக்கு அறுபது மணி நேரம் வீண். விமானத்தில் பயணம் செய்பவர்கள் வாழ்க்கையின் மிக உயர்ந்த மட்டத்தில் இருப்பவர்கள். அவர்கள் நேரம் பொன்னுனது. அறுபது மணி நேரம் பாழ் என்றுல் நாட்டுக்குப் பல லட்சம் ரூபாய் நஷ்டம் என்று பொருள். அரசாங்கக் காரியங்களில் பர்மிட்டுக்கும் லைசென்ஸுக்கும் தொழிலதிபர்கள், வர்த்தகர்கள் வீணுக்க வேண்டியிருக்கும் கால அளவுக்கோ ஒரு கணக்கே இல்லை.

தொழில், வர்த்தக அதிபர்களுக்கும் ஒரு சூடு கொடுக்கத் தவறவில்லை பால்கிவாலா. மாறி வரும் சமுதாயத்தைப் புரிந்து கொள்ளுங்கள். சமூக நலனைக் கவனிக்குமாறு

யாரும் உங்களை வற்புறுத்து முன்னர் நீங்களாகவே அதில் தீவிரம் காட்டுங்கள் என்றார்.

நமது செல்வங்களில் எல்லாம் மிக அருமையான செல்வம் நமது அரசியல் சாஸனம் என்பதை உணர்த்தினர். எத்தனையோ அறிஞர்கள் அரும் பாடுபட்டுத் தயாரித்தது. உலகில் வேறு எந்த ஜனநாயக நாட்டில் உள்ள அரசியல் சாஸனத்தை விட நமது சாஸனம் தரத்தில் குறைந்தது அல்ல. அதை நமது அரசு கிழித்துக் கந்தலாக்கி விட்டது. அடிப்படை உரிமைகளை யெல்லாம் சிதைத்தாகி விட்டது. ஏற்கனவே செய்த அநீதிகள் போதாதென்று இனி புதிதாக ஒரு மாற்றம் செய்யவிருக்கிறார்கள். குறிப்பிட்ட கட்சியைச் சேர்ந்த பாராளுமன்ற உறுப்பினர் அந்தக் கட்சி கொண்டு வரும் ஒரு மசோதாவுக்கு ஆதரவாகத்தான் வோட்டளிக்க வேண்டும். எதிர்க்கவோ அல்லது வோட்டுப் போடாமலிருந்து ஆட்சேபனை தெரிவிக்கவோ கூடாது. அதாவது ... சிந்தனை, ... கௌரவம் அனைத்தும் இழந்து போம் மைகள் ஆகிவிட வேண்டும்! இந்த இழிநிலைக்குப் பாராளுமன்ற உறுப்பினர்கள் தங்களைத் தாங்களே தாழ்த்திக் கொள்கின்றனர்; எதிர்க்கத் திராணி இல்லை.

சோஷலிஸம் என்ற வார்த்தை பரவலாக அடிபடுகிறது. அதைச் சொல்பவருக்கே அதன் அர்த்தம் தெரியாது. பத்து இந்திரா காங்கிரஸ் பிரமுகர்களை சோஷலிஸம் பற்றி விளக்கம் கேட்டால் பத்து விதமான விளக்கம் வரும்.

சோஷலிஸம் என்பதற்கு மக்கள் நலன், மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது என்று பொருள் கொண்டால் அதில் யாருக்குமே ஆட்சேபணை இருக்க முடியாது. ஆனால் நமது அரசு சோஷலிஸம் என்றால் அரசுடைமையாக்குவது என்ற எண்ணத்தில் செயல்படுகிறது. சகலத்தையும் அரசாங்கக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து ஆணவத்துடன்இயங்குகிறது. இந்தச் சர்வாதிகாரப் போக்கின் ஒரு பிரதிபலிப்பாகத் தான் நெருக்கடி நிலைமை ... கடனம் இன்னமும் நீடிக்கிறது. பாராளுமன்றத்தை அலட்சியம் செய்து விட்டு மேலே மேலே அவசரச் சட்டங்களையே ஜனாதிபதி மூலம் பிறப்பிக்கிறது. மத்திய அரசு மட்டுமல்ல; மாநில அரசுகளும் இப்படியே சட்டசபைகளை அலட்சியப்படுத்திவிட்டு அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கின்றன. பீகாரில் மட்டும் கடந்த மூன்று ஆண்டுகளில் முந்நூற்று ஏழு அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப் பட்டுள்ளன!

பால்கிவாலா அவர்கள் உதாரணம் காட்டிப் புள்ளி விவரங்கள் கூறிச் சொற்பெருக்காற்றி வந்த போது ஒரே பிரமிப்பாக இருந்த போதிலும் வீடு திரும்பும் போது ஓர் ஏக்கம் மனத்தைப் பிடித்து வாட்டாமல் இல்லை. ஒன்று ஆட்சி திருந்த வேண்டும்; அல்லது அரசியலை இரண்டாம்பட்சமாகக் கருதி அறிஞருக்கு மதிப்பளிக்கும் ஆட்சியை மக்கள் உருவாக்க வேண்டும். இரண்டில் ஒன்று நிகழுமா என்ற ஏக்கம்தான் உள்ளத்தை ... தாக்கிற்று.

— குட்டிகிருஷ்ணன்



# ட்ரூ-டோன்
# ஹேறர் கண்டிஷனர் உள்ளடங்கிய
# ஒப்பற்ற (ஹேறர் டைய்) கேசச் சாயம்

ஒருசீராக எளிதில், இயற்கையாக உங்கள் கேசத்திற்குக்
கருமையூட்டுவதோடன்றி, அதிலுள்ள ஹேர் கண்டிஷனர் உங்கள் கேசத்தை
பளபளக்கும் மென்மையோடு படிமானமாக வைத்திருக்கிறது.




❋ தலை சிறந்த முடியலங்கரிப்பாளர்களால்
உபயோகிக்கப்படும் கேசச் சாயம் (ஹேர் டைய்) இது.
❋ கேசப் பராமரிப்பிலே உலக வல்லுனர்களாம்
ஹெலன் கிர்ட்டிஸ் என்ற அமெரிக்கக்
கம்பெனியின் நிபுணத்துவத்தோடு ஆக்கம்
பெற்ற கேசச் சாயம் இதுவே.

இயல்பான கறுப்பு, கரும் சிவப்பு
நிறங்களிலும், 2 சைஸ்களிலும் வருவது
தவிரவும் கிடைப்பவை—
ட்ரு-டோன் ஸ்டெயின் ரிமூவர் (கறை நீக்கி)
ரப்பர் க்ளவ்ஸ் (கையுறைகள்), மற்றும்
உபரி டெவலப்பர்.

தரமானதோர் தயாரிப்பு:
ஜே. கே. ஹெலன் கர்ட்டிஸ் லிட்.,
பம்பாய் 400 023

தென்னிந்தியாவுக்கான வினியோகஸ்தர்கள்:
**பாரி & கம்பெனி லிட்.**

everest/999/HC-tm

## சென்ற இதழில்...

பெரும் பணக்காரர் ஆரோக்கிய சாமியின் வீட்டுக்குத் தன் டாக்சியில் தாமஸ் ஒரு பெண்ணை ஏற்றிக் கொண்டு போகிறான். நீண்ட நேரமாகி மீட்டரில் வெயிட்டிங் சார்ஜ் ஏறிக் கொண்டே போகவே விசாரிப்பதற்காக வீட்டுக்குள் நுழைகிறான் தாமஸ். அங்கே அந்தப் பெண்ணை ஒரு வாலிபன் பலவந்தப் படுத்த முயல்வதைக் கண்டு ஆத்திரமடைந்து அருகிலிருந்த ஒரு தடியை எடுத்து அவனை அடித்து விடுகிறான். ஆரோக்கியசாமியின் மகனாகிய அவன் இறந்துவிடுகிறான். அந்தப் பெண் பயந்து ஓடி விடுகிறாள். தாமஸும் டாக்சியில் ஏறிப் புறப்படுகிறான். அவனைப் பின் துரத்தி வந்த ஆரோக்கியசாமியின் வேலையாட்கள் டாக்ஸியின் நம்பரைக் குறித்துக் கொள்கிறார்கள்.

போலீஸில் சரணடையத் தீர்மானித்த தாமஸ் அதற்கு முன்னால் ஆண்டவனிடம் மன்னிப்புப் பெற மாதாகோயிலுக்குள் நுழைகிறான். அவன் கன்ஃபெஷனைக் கேட்ட பாதிரி அருமைநாயகம், ஒரு பெண்ணைக் காப்பாற்றும் முயற்சியில் எதிர்பாராமல் நடந்துவிட்ட மரணம் என்பதால் சட்டப்படியே அவன் குற்றவாளி அல்ல என்று தீர்மானிக்கிறார். அவனுக்கு அடைக்கலம் தரவும் அவனை விடுவிக்கத் தக்க சாட்சியங்களைச் சேகரிக்கவும் முடிவு செய்கிறார்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்து தாமஸை ஒப்படைக்குமாறு கேட்கிறார். மறுக்கிறார் பாதிரி. சோதனையிட இன்ஸ்பெக்டர் முயலும்போது "ஸர்ச் வாரண்ட் எங்கே?" என்று அருமைநாயகம் கேட்கிறார். "ஸர்ச் வாரண்ட்டுடன் திரும்பி வரும்போது அவன் இங்கு இல்லை என்றால்....?" என்பதாக இன்ஸ்பெக்டர் கேட்க, "அப்போது அவன் இங்கு இல்லை என்றால் உண்மை வேலை செய்ய ஆரம்பித்து விட்டது என்று அர்த்தம்!" என்பதாகப் பதில் அளிக்கிறார் பாதிரி அருமைநாயகம்.

இனி மேலே.....




காட்சி — 2

(வக்கீல் சத்தியநாராயணா வீட்டில் அவருடைய ஆபீஸ் ரூம். நடுவில் ஒரு மேஜை. மேஜையின் மேல் கேஸ் கட்டுகளும், டெலிபோனும் இருக்கின்றன. பின்னால் சட்ட நூல்கள் இருக்கும் அல்மாரி. மாடிக்குப் போகும் படிக்கட்டும் தெரிகிறது. வெங்கட் மேஜையின் மேல் காலைப் போட்டுக் கொண்டு ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறான். பங்கஜம் உள்ளேயிருந்து வருகிறாள்.)

பங்கஜம்: என்னடா படிக்கிறே வெங்கட்? சட்ட நூலா?

வெங்கட்: லா புக் எவன் படிக்கிறான்? இது ஒரு நாவல்.

பங்க: இந்த மாதிரி நாவல் படிக்கிறதும், ஊர் சுற்றுவதுமா இருந்தா நீ எப்ப முன்னுக்கு வரது... எப்ப உங்க அப்பா மாதிரி பெரிய வக்கீலாறது?

வெங்: அப்பா என்ன பெரிய வக்கீலா?

பங்க: இப்ப மெட்ராஸிலே இருக்கிற பெரிய வக்கீல்கள்ளே அவர் ஒருத்தர் இல்லையா?

வெங்: அது சரி... மத்த வக்கீல்கள் எல்லாம் அவ்வளவு மட்டம் போலிருக்குது. அம்மா! அப்பா கோர்ட்டிலே பேசறதை நீ பார்த்தது இல்லையே... ஐயோ, கடவுளே... தெலுங்கு, தமிழ், இங்கிலீஷ் எல்லாம் மணிப்பிரவாளம்.

பங்க: அதுக்கு என்னடா செய்ய முடியும்? அவர் தெலுங்கர். நான் தமிழ். என்னைக் கல்யாணம் பண்ணிண்டுட்டார். காலேஜிலே இங்கிலீஷ் படிச்சுட்டார்... எல்லாம் சேர்ந்து சேர்ந்து வரது.

வெங்: நீ ஏம்மா அப்பாவை 'லவ்' பண்ணிக் கல்யாணம் பண்ணிண்டே? யாராவது ஒரு தமிழனை லவ் பண்ணியிருக்கக் கூடாது?

(சத்ய நாராயணா உள்ளே வருகிறார்.)

சத்திய: ஏமிட்றா தமிழன் லவ்? உன் அம்மா ஏன் தெரியுமா என்னை லவ் பண்ணி மேரேஜ் சேஸுகுன்னதி?

வெங்: ஏன்?

சத்: என் தலைவிதி. நான் தலகா பயன பிரும்ம தேவுடு சரிகா எழுதலது.

வெங்: என்ன எழுத லேது?

பங்க: எல்லாத்துக்கும் பிரும்மா பேரிலேயும் தலையெழுத்தும் பேரிலேயும் பழியைப்



''உங்க புள்ளையைப் பத்தி நீங்களே இப்படி பேசறேளே, அவன் என்னதான் பண்றது?''

★

போட்டுடுங்க! வெங்கட் சொல்றதும் நியாயம் தானே? யாராவது ஒரு தமிழனைக் கல்யாணம் பண்ணிண்டிருந்தா ஏதோ ஒரு பாஷையாவது ஒழுங்காப் பேசியிருப்பார்.

சத்: பங்கஜம்! நேனு ஏமி செப்தானண்டே... இக்கட நீ தமிளு, நேனு தெலுகு. திராவிட நாடே இக்கடதான் ஆரம்பம் ஆவுதுந்தி!

வெங்: அப்ப நான் என்ன மலையாளமா? கன்னடமா?

சத்: நீவு ஏமி லேதுரா. நீவு திராவிட நாடுலே ஒரு Zoo! அதே நீவு. ஜூ ஜூ!

பங்க: அவனை ஏன் கரிச்சுக் கொட்டறேள்? அவன் பெரிய வக்கிலா வரப் போறான் பாருங்க...

சத்: பெரிய வக்கில் குமாஸ்தாவா வரும் இது.

வெங்: அப்பா...

சத்: நயினான்னு சொல்லு அனி எத்தினி தடவை நேனு செப்பானு...

வெங்: நயினா...

பங்க: சீ... நயினா என்னடா நயினா.. அப்பான்னு கூப்பிடுடா!

சத்: நேனு தெலுகே காதா? நயினாதான் கரெக்ட்!

பங்க: நீங்க நயினான்னு நான் என்ன நயினியா? தெலுங்காம் தெலுங்கு. நயினா! நயினி!!

சத்: அப்புடு... தமிள்னே நேனு அப்பான்னு நீ அப்பியா? தெலுகுலே தியாகராஜ கீர்த்தனை உந்தி... தமிள்னே ஏமி உந்தி?

பங்க: தமிழிலே பாரதியார் உந்தி, பாரதிதாசன் உந்தி, கம்பராமாயணம் உந்தி, திருக்குறள் உந்தி.

சத்: திருக்குறள் எக்கட உந்தி? திருக்குறள் பஸ்லோ போதுந்தி. பாதி பஸ் ரிப்பேர். பாதி திருக்குறள் ரிப்பேர். மீதி பாதி பஸ் ஆக்ஸிடெண்ட். மீதி பாதி திருக்குறள் ஆக்ஸிடெண்ட்! ஆந்திரப் பிரதேசம்லோ திருப்பதி உந்தி... திருப்பதி மேலே கோவில் உந்தி... கோவில் மேலே கோபுரம் உந்தி...

பங்க: கோபுரம் மேலே ஏமி உந்தி?

சத்: மன கொடுக்கு வெங்கட் உந்தி!

வெங்: நான் என்ன குரங்கா அப்பா?

சத்: நயினா... நயினா...

வெங்: வர வர நீங்க ரொம்ப மரியாதை இல்லாம பேசறீங்க. ஒரு நாள் நான் ஜட்ஜா வந்தாலும் வருவேன். அப்பவும் நீங்க வக்கிலாத்தான் இருப்பீங்க. ஜாக்கிரதை...

சத்: நீ ஜட்ஜா வருதா? அது எப்படிரா?

வெங்: இது தமிழ் நாடு. தமிழனுக்குத்தான் வேலே. ஜட்ஜ் வேலே உங்களை மாதிரி தெலுங்கனுக்கா கொடுப்பாங்க? என்னை மாதிரி தமிழனுக்குத்தான் கொடுப்பாங்க!

பங்க: அதானே! என் பிள்ளை தமிழன். அவனுக்குத்தான் ஜட்ஜ் வேலே கிடைக்கும்.

சத்: உன் பிள்ளை தமிழ் லேது, தெலுகு லேது. மிக்சர் ஆயிப் போயிந்தி. எனக்கு ஆந்திரப் பிரதேசத்திலே ஜட்ஜ் வேலே கிடைக்கும். எந்து கண்டே நேனு தெலுகு. உனக்குத் தமிள் நாட்டிலே ஏதாவது வேலே கிடைக்கும். சமையல்காரி வேலையாவது கிடைக்கும். எந்து கண்டே நீவு தமிளு... இவனுக்கு ஆந்திராவிலேயும் கிடைக்காது. தமிழ் நாட்டுலேயும் கிடைக்காது. எந்து கண்டே அவன் தமிளு பாதி, தெலுகு பாதி... ஆந்திரா போனா வென்ரா அரவவாடு அனி சொல்லுவாங்க. தமிழ்நாடு வந்தா போ தெலுங்கானு சொல்வாங்க.

பங்க: உங்க புள்ளையைப் பத்தி நீங்களே இப்படிப் பேசறேளே, அவன் என்னதான் பண்றது?

சத்: கள்ளக் கடத்தல் பண்றது! நல்ல டப்பு ஒஸ்துந்தி... ஸ்மக்லிங்லோ தெலுகு, தமிழ், கன்னடம், மலையாளம், ஹிந்தி,உருது அல்லாம் உந்தி. தேசிய ஒருமைப்பாடே இப்புடு ஸ்மக்ளிங்லேதான் உந்தி. உன் பிள்ளை ஹாஜி மஸ்தான் ஆவாரு! ஸ்மக்லிங் செய்ரா...!

பங்க: ஸ்மக்லிங்! வேற ஏதாவது நல்லதா சொல்லக்கூடாதா?

சத்: ஸ்மக்லிங் நல்லதே பங்கஜமு. ஸ்மக்லிங் பண்ணினு பணம் ஒஸ்துந்தி.

பங்க: அப்புறம் ஜெயிலு ஒஸ்துந்தி.

சத்: அப்புறம் எலெக்ஷன் ஒஸ்துந்தி: இவன் வெளியிலே ஒஸ்துந்தி !

பங்க: கர்மம். வெங்கட்டைப் பத்தி ஏதாவது ஒரு நல்ல வார்த்தை சொல்லக் கூடாதா? ஒரே ஒரு நல்ல வார்த்தை...

சத்: வெதவா?

வெங்: அப்பா! போனு போவுதுன்னு பார்த்தா மேலே மேலே பேசிக்கிட்டே போறீங்களே.:. சரி சரி... புது ஸ்கூட்டர் வாங்கணும்னு சொன்னேனே எப்ப பணம் தரப் போறீங்க?

சத்: ஸ்கூட்டர் வாணும் வெங்கட். ரோட்லே ஆக்ஸிடெண்ட் ஆயி செத்துப் பூடுவே.

வெங்: த்ஸொ த்ஸொ... என் மேலே ரொம்ப அக்கறை!

சத்: அதி காதுரா. நீவு செத்துப் போனு நானு, காரியம், கருமம் அல்லாம் செய்யணும். கோர்ட்லே அர்ஜண்ட் கேஸ் ஒஸ்தே ரொம்பத் தொந்தரவா போதுந்திரா.

பங்க: பெத்த பிள்ளையைப் பத்தி ஒரு அப்பா பேசற பேச்சா இது? பத்து மாதம் சுமந்து பெத்த என் வயிறு பத்தி எரியுது. அவன் செத்துப் போயிட்டா உங்களுக்கு மட்டும்தான் கஷ்டமா? எனக்கு மட்டும் கஷ்டம் இல்லையா? நானும் கூடமாட ஒத்தாசை பண்ண வேண்டாமா? உங்க கஷ்டத்தைப் பத்தி மட்டும் பேசிக்கிறேளே.

வெங்: அம்மா! நீயும் அப்பாவோடு சேர்ந்துக்கிட்டுக் கிண்டல் பண்றியா?

பங்க: அதில்லேடா, வெங்கட்! ஸ்கூட்டர் வாங்கிஞ ஏதாவது ஆக்ஸிடெண்ட் ஆயிட்டா என்னடா பண்றது? எங்களுக்கு இருக்கறது நீ ஒரே ஒரு பிள்ளை. நான் உன்னைத்தானேடா நம்பியிருக்கேன். அப்பாதான் இப்படி இரண்டுங் கெட்டானாப் போயிட்டார்...

சத்: ஏமி ரெண்டுங் கெட்டான்? உன் மேலே தப்பு இல்லே. நான் தலகா பயன பிரும்ம தேவுடு சரிகா எழுதலேது. இல்லாட்டா நேனு ஒரு ஆந்திராப் பொண்ணைக் கல்யாணம் சேஸ்கோனி விஜயவாடாவிலேயே இருந்திருப்பேனு.

பங்க: இப்ப கூடத்தான் போங்களேன். விஜயவாடாவுக்கு.:. நானு வந்து என்னைக் கல்யாணம் பண்ணிக்கோங்கோன்னு கேஞ்சினேன்? நீங்களாத்தானே என்னையே சுத்திச் சுத்தி வந்தேள்?

சத்: நான் உன்னை அசப்பிலே பார்த்துப் பிள்ளையார் அனி நினைச்சுக்கோனி சுத்திச் சுத்தி வந்தேன். நீ அதை லவ்னு நினைச்சுக்குனே. நான் தலகா பயன பிரும்ம தேவுடு சரிகா எழுதலேது.

பங்க: என் தலையெழுத்துத்தான் சரியில்லே. என்னை அடிக்கடி கோவில்லே பார்த்து பங்கஜமு, பங்கஜமுன்னு என் காதைப் பத்தி வர்ணிச்சிண்டே இருந்தேள். ஒவ்வொருத்தர் கண்ணை வர்ணிப்பா, மூக்கை வர்ணிப்பா, இவர் காதையே வர்ணிக்கிறாரே, எவ்வளவு ஆசையா இருப்பார்னு நினைச்சுக் கல்யாணத்தைப் பண்ணிண்டுட்டேன்.

சத்: உன் காதை நேனு வர்ணிச்சேனு... எப்புடு?

பங்க: அடிக்கடி சொல்வேளே மறந்துட்டேளா... பங்கஜமு நீ காது... நீ காதுன்னு.

சத்: அய்யோ... ஏடு கொண்டலவாடா! காதுன்னு தெலுங்குலே சொன்னேன். பங்கஜம் நீ காது – நீ இல்லேன்னு அர்த்தம்.

பங்: நான் இல்லேன்னு சொன்னேள்?

சத்: அவுனு. தமிழ் பாஷை தகருர்லே இப்படி உன்னைக் கல்யாணம் சேஸ்குனு.. தேவுடா!

★



"என்ன ஸ்கூட்டரா, பெட்ரூம் டேப்பைப் போடட்டுமா?"

பங்க: எங்காத்துலே கூட எங்கப்பா சொன்னூர்... மாப்பிள்ளையைப் பார்த்தா, அரை குறை மாதிரி இருக்கு... சரியான முடிவுதானு பங்கஜம்னு கேட்டார். நான் தான் தப்புப் பண்ணிட்டேன்.

வெங்: உம்... அப்பா! ஸ்கூட்டர் வாங்கித் தரமாட்டீங்க... சரி... கேளுங்க. நேத்து ராத்திரி நீயும் அம்மாவும் பெட் ரூம்லே பேசிக்கிட்டிருந்ததை டேப் ரெக்கார்ட் பண்ணி யிருக்கேன்...

சத்: உரேய்... உரேய்...!

வெங்: நான் இப்போ இதைப் போட்டுக் காட்டப் போறேன்.

சத்: ஒத்துரா...

பங்க: போடட்டுமே... கொஞ்சம் கேட்க லாமே!...

சத்: சீ....சீ... வோபலோ வெள்ளு.

வெங்: நான் போடத்தான் போறேன். இங்கே மட்டும் இல்லே. வரவங்களுக்கும் போட்டுக் காட்டுவேன்!

சத்: ஒத்துரா... நயினு... உராய்டா...

வெங்: அப்போ ஸ்கூட்டர் வாங்கிக் கோடு!

சத்: சின்னப் பசங்களுக்குக்கூட கான்ஸர், ஹார்ட் அட்டாக்கெல்லாம் வருது... உனக்கு ஒண்ணும் வராதா?

வெங்: என்ன ஸ்கூட்டரா, பெட்ரூம் டேப்பைப் போடட்டுமா?

பங்க:என்னடா அப்பான்னு மரியாதை இல் லாமப் பேசறே! போடறதுன்னு போடேன். கேட்டுட்டுப் போறோம்!

சத்: ஒத்து...ஒத்து... உம் மெட்ராஸ்லோ ஃபஸ்ட் பத்து வக்கில் பார்த்தா அதுலே நான் ஒண்ணு... நமக்கு இந்த மாதிரி ஒரு பிள்ளை! பிரம்ம தேவுடு நான் தலகா பயன சரிகா எழுதலேது.

வெங்: ஸ்கூட்டரைப் பத்தி என்ன சொல் றீங்க?

சத்: மூணு சக்கரம் சைக்கிள்கூட வாங்கிக் கொடுக்க முடியாது. வெள்ளு.

வெங்: ஆல்ரைட்... கேளுங்க!

(டேப் ரிக்கார்டர் ஸ்விட்சைப் போடுகிறான்.)

சத்: பங்கஜமு.... பங்கஜமு... ரா...ரா...

பங்க: போங்கோன்னு...

சத்: எக்கட போயேதி... ரா பங்கஜமு! நீ காது.... நீ காது....

பங்க: நம்ம பையனுக்கு இருபத்தி யோரு வயசாகிறது. இப்ப போய்...!

(வெங்கட் டேப்பை நிறுத்துகிறான்.)

சத்: வெதவா எமிட்டிரா இதி... உனக்கு டேப் ரிக்கார்டர் வாங்கிக் கொடுத்தது தப்பா போயிந்தி.

பங்க: வெங்கட்! ஏண்டா இந்தமாதிரி பண்ணினே? உனக்கே நல்லா இருக்கா, இது? ஏண்டா டேப்பைப் பாதியிலே நிறுத்தினே?

(போன் மணி அடிக்கிறது)

சத்: ஹலோ... சத்யநாராயணு எம்.ஏ., எம். எல். ஸ்பீக்கிங்... ஏமி... ஃபாதர் அருமைநாயகம் நீங்க அரெஸ்ட் பண்ணி வெச்சிருக்குதா? எந்துகு?... ஃபாதர் எந் துக்கு அரெஸ்ட்... என்னைப் பார்க்கணும்னு ஃபாதர் சொல்லுதா?... ஒஸ்தானு...இப்புடு வரேன்... போலீஸ் ஸ்டேஷன்லேதான் இருக் கிறாரா?... ஒஸ்தானு இப்புடு ஒஸ்தானு... மஸ்தானு காதண்டி! ஒஸ்தானு.

(போனை வைத்துவிட்டுக் கிளம்புகிறார்.)

காட்சி 3

(போலீஸ் ஸ்டேஷன். மத்தியிலே டெலிபோனுடன் கூடிய மேஜை. இன்ஸ்பெக்டரும் ஃபாதர் அருமைநாயகமும் உட்கார்ந்திருக்கிறார்கள்.)

இன்ஸ்பெக்டர்: ஃபாதர், எவ்வளவு பெரிய தப்புப் பண்ணிட்டீங்க. அந்த ஆளைத் தப்பிக்க வெச்சுட்டீங்களே!

அருமைநாயகம்: ஐ யாம் ஸாரி, இன்ஸ் பெக்டர். உண்மையைக் கண்டு பிடிக்கிறவரை அவன் வெளியிலே இருக்கிறதுதான் நல்ல துன்னு மனசார நம்பினதாலேதான் அப் படிச் செய்தேன்.

இன்ஸ்: நான் சர்ச்லே நாலு வாசல்லேயும் கான்ஸ்டபிள்களை வெச்சிருந்தேனே?

அரு: உங்களுக்குத் தெரிஞ்ச நாலு வழி தான் இருந்தது. எனக்குத் தெரிஞ்ச அஞ்சா வது வழியும் இருந்தது. ரொம்பச் சுலபமா வெளியிலே அனுப்பிச்சுட்டேன்.

இன்ஸ்: எங்கே அனுப்பிச்சீங்க?

அரு: எனக்குத் தெரிஞ்சவர் ஒருத்தர் கிட்டே அனுப்பியிருக்கேன்.

இன்ஸ்: ஸோ... அவன் இப்ப இருக்கிற இடம் உங்களுக்குத் தெரியும்.

அரு: ஆமாம். தெரியும்.

இன்ஸ்: எங்கே இருக்கான்?

அரு: அதை நான் சொல்லிட்டா அவனை நிரபராதின்னு நிரூபிக்கச் சாட்சியங்கள் சேக ரிக்க முடியாமப் போயிடும்.

இன்ஸ்: அப்ப அவன் எங்கே இருக்கான்னு சொல்ல மாட்டீங்க.

அரு: என்னை மன்னிச்சுடுங்க.

இன்ஸ்: நாங்க எல்லாம் கடவுள் இல்லே. மன்னிச்சுடுன்னு கேட்டவுடனே மன்னிச்சுட றதுக்கு. சட்டப்படி குற்றம் செய்யறோம்னு தெரிஞ்சும் செய்து இப்படி அரெஸ்ட் ஆகி வந்திருக்கீங்களே. இதெல்லாம் உங்களுக்குத் தேவைதானு? ஒரு கொலைகாரன் தப்பிக்க வழி பண்ணிக் கொடுக்க வேண்டியது உங் களுக்கு அவசியம்தானு?

அரு: ஒரு நிரபராதிக்காகவும் உண் மைக்காகவும் சில கஷ்டங்களை ஏத்துக்க வேண்டி வந்தா அது எனக்கு அவசியம்தான் இன்ஸ்பெக்டர்.

இன்ஸ்: சரி. இதெல்லாம் எழுதி ஒரு ஸ்டேட்மெண்ட் கொடுத்திடுங்க.

அரு: வக்கீல் சத்யநாராயணுவுக்கு போன் பண்ணி யிருக்கோமே அவர் வந்துடட்டுமே.

இன்ஸ்: ஏன்? அவர் வந்து ஸ்டேட்மெண்ட் கொடுக்காதீங்க; உண்மையை ஒப்புத்துக்கா தீங்கன்னு சொன்னு, நீங்களும் அந்த மாதி ரியே செய்துடுவீங்களா?

அரு: நிச்சயமா மாட்டேன். அவர் வேண்டாம்னு சொன்னாலும் கூட நான் உண்மையை எழுதிக் கொடுக்கத் தயாரா இருக்கேன்.

இன்ஸ்: அப்ப இப்பவே எழுதுங்க. அவ ருக்காக எதுக்கு வெயிட் பண்ணணும்? உண் மையைப் பேசத்தான் தயங்க மாட்டீங்க

போலிருக்குது... உண்மையை எழுதக் கொஞ்சம் தயக்கம்தானு?

அரு: நோ...நோ... பேப்பர் கொடுங்க.

(எழுதுகிறார்)

இன்ஸ்: எனக்கே கஷ்டமா இருக்குது. ஃபாதர். உங்களேயே அரெஸ்ட் பண்ண வேண்டியதாப் போச்சு. இதனுலே எவ்வளவு ப்ராப்ளம்ஸ் வருமோ... உம்...

அரு: எழுதிட்டேன்.

இன்ஸ்: தாங்க்யூ... டெபுடி கமிஷனர் இப்ப வருவார். நீங்க லாக்கப்புக்கு...(தயக்கத்துடன்) I am sorry I don't know!

(சத்தியநாராயணு உள்ளே வருகிறார்)

சத்: ஹலோ! குட் ஈவினிங்... என்னு ஃபாதர் இது ஏமி? இன்ஸ்பெக்டர் இவரை எதுக்கு அரெஸ்ட் ஆயிட்டாரு?

இன்ஸ்: மிஸ்டர் சத்யநாராயணு! இவரை ஒரு கொலைக் குற்றவாளியைத் தப்பிக்க வெச்சதுக்காக அரெஸ்ட் செய்திருக்கோம். இதோ இவர் கொடுத்த ஸ்டேட்மெண்ட் படிக்கிறேன். கேளுங்க.

(படிக்கிறார்)

''ஆரோக்கியசாமியின் மகனைக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுள்ள தாமஸ் தியாகராஜன் என்ற டாக்ஸி டிரைவருக்கு நான்தான் அடைக்கலம் கொடுத்து தப்பிக்க வைத்திருக்கிறேன். அவனே எனக்கு வேண்டியவர் ஒருத்தர் வீட்டுக்கு அனுப்பி விட்டேன். அவன் நிரபராதி. அதை நிரூபிக்க நான் முயற்சி செய்யப் போகிறேன். அதற்கு எனக்கு அவகாசம் தேவைப்படுகிறது. அதனுல்தான் அவனைப் போலீஸிடம் ஒப்படைக்கவில்லை. ஆண்டவன் என் பக்கம் என்று நம்புகிறேன்.''

சத்: ஏமண்டி ஃபாதர்! இந்த ஸ்டேட்மெண்ட் நீங்க கொடுத்ததுதானு?

அரு: ஆமாம்.

சத்: என்ன ஆமா... எந்துக்கு? நான்தான் வரேன்னு சொன்னதே... என்ன அவசரமு?

அரு: நான் உண்மையைத்தானே எழுதிக் கொடுத்தேன்.

சத்: ஆ! பெத்த உண்மை. எது உண்மை எது பொய்? இன்ஸ்பெக்டருக்கு எட்ல தெரியும்? தேவுடுக்கே தெலுசு.

அரு: நானும் அதைத்தான் சொல்றேன். ஏசுவுக்கு உண்மை தெரியும்.

சத்: அப்புடு ஏகதான் ஸ்டேட்மெண்ட் கொடுக்கணும். மீரு எந்துக்குக் கொடுத்தது?

இன்ஸ்: நீங்க வந்தா ஏதாவது செய்துடுவீங்கன்னு தெரிஞ்சுதான் நான் ஸ்டேட்மெண்ட் வாங்கிட்டேன்.

சத்: என்ன இப்புடு? இப்பவும் ஏதாவது செய்வேன். இந்த ஸ்டேட்மெண்ட் இன்ஸ்பெக்டர் ஃபோர்ஸ் பண்ணி வாங்கினது அனி செப்தா...

அரு: இல்லை. நானுத்தான் கொடுத்தேன்.

சத்: தெலுசு... கம்னு இரு... எக்ஸ்க்யூஸ்மி... ஏமி இன்ஸ்பெக்டர்...ஃபோர்ஸ் பண்ணி வாங்கின ஸ்டேட்மெண்ட்...

இன்ஸ்: அவரேதான் இல்லேன்னு ஒப்புக்கிருரே.

சத்: அவருக்கு மைண்ட் அப்செட். அதான் அப்படிப் பேசிறுரு.

அரு: எனக்கு மனநிலை சரியாகத்தான் இருக்கு.

சத்: தெலுசு... இன்னெரு பேப்பர் வாங்கி அதுவும் எழுதிக் கொடுக்குறா? தேவுடு... நான் தலகா பயன பிரம்மதேவுடு சரிகா எழுதலேது.

அரு: மிஸ்டர் சத்யநாராயணு!

சத்: உஸ்... மீரு பேசினு டேஞ்சர். நேனு முதல்லே பெய்ல்லே உங்களை வெளியிலே கொண்டு வரதுக்கு ஏற்பாடு செய்யணும். இப்புடு அதுதான் முக்கியம். அதுவரைக்கும் பொழுது போகலேன்னு பைபிள் படியுங்கோ; ஸ்டேட்மெண்ட் எழுதாதீங்கோ! உம்... ஃபாதர், உங்களுக்கு யாராவது எம்.எல்.ஏ., எம்.பி. தெலுசா?

அரு: தெரியாதே... ஏன்?

சத்: சரி. அப்ப நேரான வழியிலேதான் பெய்ல் வாங்கணும். குஸ்தானு.

இன்ஸ்: மிஸ்டர் சத்யநாராயணு! இப்ப இங்கே டெபுடி கமிஷனர் வரதாச் சொல்லியிருக்கார். நீங்க இருந்து பார்த்துட்டுப் போறதா யிருந்தா பார்த்துட்டுப் போங்க.

சத்: ஓஹோ! ஃபாதர் அரெஸ்ட் ஆனுர்னு டெபுடி கமிஷனர் வராரா? பின்னேங்க அரெஸ்ட் ஆனு நீங்களே பார்த்துக்கிறீங்க. ஃபாதர் அரெஸ்ட் ஆனு டிபுடி கமிஷனர் வராரு. தம்பிங்க அரெஸ்ட் ஆனு எம். எல்.ஏ, எம். பி. எல்லாரும் வராங்க. ஒகடி ஒகடிக்கு ஒக ஒக இரேடு! (காட்சி முடிவு)

(தொடரும்)

பால் குடிக்க
மறுக்கும் பிள்ளைக்கு
பல்சுவையுள்ள
கஸ்டார்டு தாருங்கள். அது
அள்ளிப் பருகுவதைப்
பாருங்கள்!





உங்கள் பிள்ளை பால்குடிக்க மறுக்கிறதா? கவலைப் படாதீர்கள். அதற்கு இன்சுவையுள்ள ஊட்டமிக்க கஸ்டர்டு தாருங்கள். அது மகிழ்வுடன் சாப்பிடும். அதைத் தயாரிக்கும் முறை மிகவும் எளிது. 4 தேக்கரண்டியளவு **பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடர், 3 தேக்கரண்டியளவு சர்க்கரை, சிறிதளவு குளிர்ந்த பால். மூன்றையும் கலந்து விழுதுபோல ஆக்குங்கள். பிறகு ஒரு கோப்பை பாலை சூடாக்கி, அதில் இந்த விழுதைக் கரையுங்கள். கொதிக்கும்வரை கிளறுங்கள். பின்னர் நெய் தடவிய தட்டில் ஊற்றுங்கள். அது குளிர்ந்து படியட்டும். நாள்தோறும் உங்கள் பிள்ளைக்குப் பால் கொடுக்கும் சுவையான வழி இது!



பழ சாலடைக் கிண்ணத்தில் எடுத்து, கஸ்டர்டால் அலங்கரியுங்கள். இப்போது கேக்கின்மீது கஸ்டர்டு தடவி, சுவையைக் கூட்டுங்கள். ஜெல்லியின்மீது கஸ்டர்டு தடவிப்பாருங்கள். எல்லாம் சுவை மயம்! இத்தகைய கஸ்டர்டு தயாரிக்க, 1½ தேக்கரண்டி **பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடர், 3 தேக்கரண்டியளவு சர்க்கரை, சிறிதளவு குளிர்ந்த பால், மூன்றையும் கலந்து விழுதுபோல் ஆக்குங்கள். ஒரு கோப்பை பாலை சூடாக்குங்கள். அதில் கஸ்டர்டு பவுடர் விழுதைக் கரைத்து, கொதிக்கும்வரை கிளறுங்கள். அதை சூடாகவோ குளிர்ந்ததாகவோ உங்கள் பிள்ளைக்குத் தாருங்கள். சுவையோ சுவை!



ஒரு விசேஷ முறை: நீங்கள் வீட்டிலேயே ஐஸ்க்ரீம், ஃபலூதா, பாயசம், ரபடி தயாரித்தால் பாலைக் கெட்டியாக்க **பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடரையும் சேர்க்கவும். ஒவ்வொரு தித்திப்பும் இரட்டிப்பு சுவை தரும்!

இதற்கு வெரய்டி கஸ்டர்டு பவுடரை உபயோகியுங்கள். வனில்லா, ஆரஞ்சு, பனானா, ஸ்ட்ராபர்ரி, லெமன், ரஸப்பர்ரி, ஆகிய 6 கனிச் சுவையுள்ள கஸ்டர்டு பவுடர்கள் உள்ளன.

6 இனிமையான சுவைகள் கொண்ட வெரய்டி கஸ்டர்டு பவுடர் பாக்கெட்டும் கிடைக்கிறது.

**முட்டை கலவாதது**




அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்தோடு பக்குவப் படுத்தப்பட்டதால், கஸ்டர்டு பவுடர்களிலேயே மிகச் சிறந்தது **பிரவுன் & போல்ஸன்**. ஒரு டின் கைவசம் இருக்கட்டும்—எப்போதுமே!



**கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-400 001.

# பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர்

இன்ஸ்பெக்ஷனுக்காக வந்த எஸ். பி. ரொம்பவும் கோபித்துக் கொண்டுவிட்டார்.

சென்ற மூன்றுமாதங்களாக என் ஸ்டேஷ னுக்கு வந்த ஜேப்படி கேஸ்களில் ஒன்றைக் கூட எங்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. நான் இங்கு இன்ஸ்பெக்டராக வந்து என்னமோ ஒரு மாதம்தான் ஆகிறது. இருந் தாலும் கூட, எஸ். பி.யின் பாட்டு அத்தனை யையும் ஒட்டுமொத்தமாக நான் வாங்கிக் கொள்ள நேர்ந்து விட்டது.

''எப்படியாவது முயற்சி செய்து பிடித்து விடுகிறேன்!'' என்று உறுதி சொன்னேன்.

''அப்படியானால் இதுவரை போதுமான அக்கறை காட்டவில்லை என்று ஒப்புக்கொள் கிறாய், இல்லையா?''என்று என்னை மடக்கினர்.




''அப்படி இல்லை, ஸார்!'' என்று நான் சமாதானம் சொல்ல முயன்றபோது கை அசைவினால் அவர் என்னை அடக்கினர்.

''உங்கள் கேஸ் ரிஜிஸ்தரில் பஸ் ஸ்டாண்ட் ஜேப்படி கேஸ் பதிவு ஆகாத நாளே கிடையாது. இதுவரை ஒருவனைக்கூட உங்களால் பிடிக்கமுடியவில்லை என்றால் உம்... எனக்கே என்னவெல்லாமோ தோன்றுகிறது. பப்ளிக் — அவன்தான் ஐயா — பொருளைப் பறி கொடுத்தவன் — என்ன சொல்வான்?''

என்ன சொல்வான்? ஜேப்படிக்காரர்களு டன் நாங்கள் கூட்டு என்பான். இரண்டு கைகளாலும் வாங்கி நான்கு ஜேபிகளிலும் போட்டுக் கொள்கிறோம் என்பான்.

''மிஸ்டர் நாதன்! இதை நான் எப் போதும் என் கவனத்தில் வைத்துக்கொண் டிருப்பேன். உங்கள் முயற்சிகளைக் கண் காணித்துக் கொண்டும் இருப்பேன். இந்த ஊருக்கு வர எத்தனையோ விண்ணப்பங்கள் வந்தன. ஆனால் உங்கள் அதிர்ஷ்டம் உடனே கிடைத்தது. தொடர்ந்து இருக்க வேண்டும் என்று அக்கறை இருந்தால் அதற்கு ஏற்ற படி செயல்படுங்கள்!'' எனக் கூறிவிட்டுக் காரில் ஏறினர்.

அவர் குரலில் கடுமை இல்லை. பரிவு இருந்தது. 'டேய், பையா! நீ இந்த ஜேப்படிக் கூட்டத்தைப் பிடித்து உள்ளே தள்ளா விட்டால் எந்தத் தண்ணி இல்லாக் காட்டுக்குகோ, சவுக்குத் தோப்புக்கோ காவலாகப் போக வேண்டியதுதான்!' என்ற அச்சுறுத்தல் தெளிவாகவே இருந்தது.

நான் யோசித்துப் பார்த்தேன். மண் டையை உடைத்துக் கொண்டேன். எந்த வழியும் புலப்படவில்லை. எல்லாக் கான்ஸ் டபிள்களையும் மாற்றி மாற்றிப் பஸ் நிலையத் தில் 'டூட்டி' போட்டேன். ஒரு பயனும் இல்லை.

என்னை எஸ். பி. மிரட்டியதை விட இன் னும் அதிகமாக எனக்குக் கீழே இருந்தவர்களை விரட்டினேன். ''எஸ், ஸார், எஸ் ஸார்'' என்று தலையை ஆட்டினார்களே தவிர கேஸ் பதிவு ஆவது குறையவில்லை.

பதிவாகி யிருந்த புகார்களைப் படித்தேன். அரசாங்க அதிகாரி தம் பர்ஸை ரயில்வே பாஸுடன் தொலைத்த பரிதாபத்தை விவ ரித்திருந்தார். அறுவடைப் பணத்தைப் பாங்கியில் வாங்கியிருந்த கடனுக்குத் தவணை யாகச் செலுத்த வந்த விவசாயி தன் பை அறுந்து தொங்கிய கதையை அழுமாட்டாத குறையாகக் கதறியிருந்தான். பஸ்ஸில் ஏறும்போது கழுத்தில் இருந்த ஆறு சவரன் சங்கிலி, ஓர் இடம் பார்த்து உட்காருவதற் குள் மறைந்துபோன அதிசயத்தை ஒப்பாரி வைத்து அழுதிருந்தாள் ஒரு பெண்மணி.

இந்தத் தொழிலில் வழக்கமாக ஈடு படுபவர்களை யெல்லாம் நயமாகவும் பய மாகவும் விசாரித்து விட்டோம். ''யார் என்று எங்களுக்கும் புரியவில்லை. தகவல் தெரிந்தால் சொல்கிறேன்!'' என்றான் போலீஸ் உளவாளி.

ஏதோ ஒரு புதிய கூட்டம் திட்டம் போட்டுச் செயல்படுகிறது என்பதைப் புரிந்து கொண்டேன். என்னைத் தவிர ஸ்டேஷனில் உள்ள அத்தனை பேரும் பழைய ஆட்கள். எல்லோருக்கும் பரிச்சயமான வர்கள். அவர்களை அனுப்பினால் திருடு பவன் உஷாராகிறான்.

அப்போதுதான் பஞ்சாமி வந்தான். என் பால்ய சிநேகிதன். தொந்தி தொப்பையுடன் நடக்கவே சிரமப்பட்டுக் கொண்டு என்னைப் பார்க்க வந்தான். அவனைப் பார்த்தவுடன் தஞ்சாவூர் செட்டியார் பொம்மைக்கு உயிர் வந்தது போலிருந்தது. அவனைப் பார்த்தவுடன் எனக்கு ஒரு திட்டம் தோன்றியது.

மறுநாள் காலை அவனை ஸ்டேஷனுக்கு அழைத்துப் போனேன். ஒரு தொளதொள ஜிப்பாவை மாட்டினேன். மேலே ஓர் அங்க வஸ்திரம். நெற்றியிலே பெரியதாக ஒரு நாமம். தடித்த மணிபர்ஸை அவன் பையில் போட்டேன். ஒருசில நோட்டுக்கள் தான் உண்மையானவை. பாக்கி யெல்லாம் நாடகம் சினிமாவில் வரும் நோட்டுக்கள்.

அவனை பஸ் நிலையத்துக்குள் அனுப்பி விட்டு நானும் என்னைப் போல் ஊருக்குப் புதிதான ஒரு சி. ஐ.டி.யும் 'மப்டி'யில் அவனைப் பின்தொடர்ந்தோம். எங்கள் பார்வை பஞ்சாமியின் மேல். அவனை மோதுபவர்கள் யாருமே எங்கள் பார்வைக்குத் தப்பவில்லை.

அன்று மாதம் முதல் தேதி. ஜேப்படிக்காரர்களுக்கும் வேட்டை. மாதம் முழுதும் உழைத்துச் சம்பாதித்த சில நோட்டுக்கள் கண் சிமிட்டும் நேரத்தில் பறிபோகும் நாள். அன்று விரிக்கப்பட்ட வலையில் , நிச்சயம் மீன் சிக்கும் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது.

பஸ் நிலையத்தில் ஏகக் கூட்டம். அன்று வாராந்திரச் சந்தை வேறு. ஒருவர் மேல் ஒருவர் மோதினார்கள். பஞ்சாமி மெதுவாக

அன்னம்

யானைபோல் நடந்தான். சினிமாப் போஸ்டர்களை யெல்லாம் வாயைத் திறந்து கொண்டு பார்த்தான். ஒரு வெற்றிலை பாக்குக் கடையில் சோடா வாங்கிக் குடித்தான். பர்ஸைத் திறந்து எல்லோர் பார்வையிலும் படும்படி பணத்தை எடுத்து எண்ணி ஒரு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தான். சில்லறையைப் பைக்குள் போடும்போது கை நழுவியது போல் கீழே போட்டான். யாரோ ஒருவர் ''என்ன ஸார் இப்படி அஜாக்கிரதையாக இருக்கிறீர்கள்? ஊரெல்லாம் திருட்டாக இருக்கிறது. பத்திரம்!'' என்று எச்சரித்தபடி எடுத்துக் கொடுத்தார்.

ஒரு கண்டக்டரைச் சுற்றிக் கூட்டம் அலை மோதிக் கொண்டிருந்தது. பஞ்சாமி தானும் முண்டியடித்துக் கொண்டு போய் 'பட்டுக்கோட்டை ஒரு டிக்கட்' என்று கூவினான். அவன் குரல் என்னவோ எடுபடவில்லை. அவன் கூட்டத்திலிருந்து வெளியே வந்த போது அவன் பர்ஸ் மட்டும் பத்திரமாக இருந்தது.

ஒரு பஸ்ஸில் ஏறுவான். திடீரென்று கீழே இறங்குவான். பஸ் ஸ்டாண்ட் பெஞ்சு ஒன்றில் உட்கார்ந்து ரூபாய்களைத் தன்னைச் சுற்றிப் பரப்பி வைத்துக் கொண்டு ஒரு டயரியில் கணக்கு எழுதுபவன் போல் பாவனை செய்தான். 'பரவாயில்லை. சொல்லிக் கொடுத்ததை விட அதிகமாகவே செய்கிறான்' எனத் திருப்திப்பட்டுக் கொண்டு விட்டேன்.

மாலை நாலு மணி முதல் இரவு எட்டு மணி வரை நாங்கள் பஸ் நிலையத்தைச் சுற்றிச் சுற்றி வந்தோம். பஞ்சாமியைச் சீண்டுவாரில்லை.

என் உதவியாளர் கூடக் கேட்டார்: ''ஏன் ஸார், இன்றைக்கு ஜேப்படிக்காரர்களுக்கு ஏதாவது விரதமோ? கைநீட்டக் கூடாது என்று சங்கல்பமோ?'' என்று கேட்டார்.

ஒரு பஸ்ஸில் பஞ்சாமி ஏறி இறங்கும் போது பஞ்சாமியின் பையில் பர்ஸ் இல்லை. நாங்கள் பாய்ந்து போனோம். அதற்குள் அந்த பஸ் கண்டக்டர் பஞ்சாமி உட்கார்ந்த ஆசனத்தில் விழுந்து கிடந்த பர்ஸைத் தூக்கிக் கையில் கொடுத்து விட்டார்.

''இப்படித்தானா போடுவது? அப்புறம் இவன் எடுத்தான், அவன் எடுத்தான் என்று போலீஸ் ஸ்டேஷனில் புகார் செய்வது....'' என்று சாடினார்.

பஞ்சாமி அசடு வழிய பர்ஸையும் வசவுகளையும் வாங்கிக் கொண்டான்.

மணி எட்டரை. யாரும் கிடைக்கவில்லை.

''சரி, நாளைக்குப் பார்க்கலாம்!'' என்று சொல்லிவிட்டு நான் திரும்பினேன்.

ஸ்டேஷனில் சீருடை அணியக்கூட நேரமின்றிச் சில முக்கியமான வேலைகளைப் பார்த்துவிட்டு நான் வீடு திரும்பும்போது மணி பத்து.

சரோஜா கதவைத் திறந்தாள். நான் தாமதமாக வருவது அவளுக்குப் பழக்கம் தான். முதல் தேதி மட்டும் முன்னதாக வந்து அவளுடன் 'ஷாப்பிங்' போவேன்.

''ஸாரி, சரோ! ஒரு முக்கியமான வேலை. சீக்கிரம் வரமுடியவில்லை. இந்தா சம்பளம்... பீரோவில் வை!'' என்று சொல்லிய நான் என் 'பாண்ட்' பையில் கையை விட்டேன்.

அடுத்த கணம் தேள் கொட்டியது போல் துடித்தேன். என் பை காலி.

பஞ்சாமியை நான் கவனித்துக் கொண்டிருந்தபோது என் பையை எவனோ குறி வைத்து அடித்திருக்கிறான். ஊமையன் கனாக் கண்டது போல் வாயைத் திறக்க முடியாத நிலை.

மறு நாள் ஸ்டேஷன் வந்தவுடன் என்கூட வந்த சி. ஐ. டி. பேசினார். அழ மாட்டாத குறையாக அவர் சம்பளம் பர்ஸுடன் மறைந்த மாயத்தை விவரித்தார்.

''அப்படியா! அடடா!'' என்று நான் அனுதாபம் தெரிவித்தேன். என் கதையை நான் அவரிடம் சொல்லவில்லை. சுய கௌரவம் தடுத்தது.

உங்கள் ஊர் தண்ணீர் இல்லாத காடா? சவுக்குத் தோப்பா? அங்கே சீக்கிரமாக நீங்கள் என்னைச் சந்திக்கலாம்!

விஷயம் தெரிந்ததும் எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

விசுவநாதன், சாந்தா (மகாராஷ்டிரம்)

# மறதி மன்னர்கள்

## பையில் பணம்!

அன்று மாலை எங்கள் கல்லூரியில் விளையாடி முடிந்ததும் நாங்கள் குளித்துவிட்டு எல்லோருமாகக் கடைத் தெருவுக்குப் போனோம். என்ன ஆச்சரியம்! என் கால் சட்டைப் பையில் பணம் இருக்கக் கண்டேன். எப்பொழுது அதை வைத்தேன் என்று எனக்குத் தெரியவில்லை. மீண்டும் மறு நாள் காலை குளிக்கப் போனபோது... என்ன ஆச்சரியம்! ஹாஸ்டல் குளியல் அறையில் என் கால் சட்டை பரிதாபமாக ஸ்டாண்டில் தொங்கிக் கொண்டிருந்தது.

''நண்பரே! தங்களுடைய நேற்றைய செலவு என்னுடையதாக இருந்ததுபோலிருக்கிறது'' என்றார் ஒரு நண்பர். 'அசடு' என்பதன் அர்த்தம் யாருக்காவது தெரியாமல் இருந்தால் என் முகத்தைப் பார்த்திருக்கலாம் அப்போது.

கோபி, கருமாத்தூர்

## மறதியோ மறதி!

ஒரு வியாழனன்று லஸ்ஸில் கல்கி இதழ் வாங்கிக் கொண்டு 12பி. பஸ்ஸில் ஏறினேன். ஆழ்வார்பேட்டையில் ஏறி, எனக்கடுத்தாற்போல் உட்கார்ந்த நபர் கல்கியைப் படிக்கக் கேட்டார். அதைப் புரட்டிப் பார்த்துவிட்டு மாம்பலம் பஸ் ஸ்டாண்ட் வந்தவுடன் திருப்பிக் கொடுத்தார். நானும் அவசரம் அவசரமாக அதைப் புரட்டிப் பார்க்க ஆரம்பித்தேன். நான் இறங்க வேண்டிய பனகல் பஸ் ஸ்டாப் வந்தது. அவசரம் அவசரமாக எழுந்த நான், கல்கி இதழை, அடுத்த நபர் கையில் திணித்துவிட்டு 'தாங்க்ஸ்' என்று சொல்லிவிட்டுக் கீழே இறங்கினேன். இறங்கியபிறகே நான் திருப்பிக் கொடுத்தது நான் வாங்கிய கல்கி என்பதை உணர்ந்தேன்! என் மறதியை என்னவென்று சொல்வது?

வி. என். கிருஷ்ணமூர்த்தி, சென்னை 26

## துண்டு எங்கே?

ஆபீஸிலிருந்து வீடு திரும்பியதும் மனைவி, ''வராந்தாவில் கம்பியில் உலர்த்துவீர்களே, சரிகைத் துண்டு, அதைக் காணவில்லை'' என்றாள்.

கால் சட்டையை அவிழ்த்து வேட்டி மாற்றிக்கொள்ளும்போதுதான் எனக்குப் புரிந்தது — காலையில் 'அண்டர்வேர்'க்கு மேல் உடுத்தியிருந்த துண்டை அகற்றாமலேயே அதற்கு மேல் பாண்டை அணிந்து எட்டு மணி நேரம் டூட்டி செய்துவிட்டு வந்திருக்கிறேன் என்று!

## சிரிப்பின் காரணம்!

எனக்குத் தெரிந்த ஆசிரியர் ஒருவர் மேஜையில் ஒருபுறத்தில் கர்ச்சீப்பையும் மற்றொரு கோடியில் 'டஸ்டரை'யும் வைத்திருப்பார். ஒரு நாள் பாடம் நடத்தும் உற்சாகத்தில் கைக்குட்டையை எடுத்துப் போர்டை அழித்தார். சற்று நேரம் சென்றதும் பாடத்தை முடித்துவிட்டு டஸ்டரை எடுத்துக் கர்ச்சீப் என எண்ணி அழுத்திக் கொண்டு முகத்தைத் துடைத்துக் கொண்டார். முகமெல்லாம் ஒரே அட்டைக் கரி நிறம்..... மாணவர்கள் தங்களை மறந்து பெரிதாகச் சிரித்து விட்டனர். காரணம் புரியாத ஆசிரியர் 'சத்தம் போடாதே.ா' என்று உரக்கக் கத்தினார். மாணவர்கள் 'கப்சிப்'. முன் பெஞ்சியில் இருந்த ஒரு மாணவன் மெதுவாகச் சிரிப்பின் காரணத்தை விளக்கினான். ஆசிரியருக்கே இப்போது சிரிப்பு வந்துவிட்டது. அந்த ஆசிரியர் இப்போதும் இதை, வகுப்பு மாணவர்களிடம் வேறு யாரோ ஓர் ஆசிரியர் இப்படிச் செய்ததாகச் சொல்லி வகுப்பைக் கலகலப்பாக்கி வருகிறார்!

ஞானி மணாளன், மன்னார்குடி.

## அசடு வழிந்தது!

நானும் என் கணவரும் ஒரு நாள் கடை வீதிக்கு ஸ்கூட்டரில் போய்த் திரும்பினோம். வழியில் ஒரு நண்பரைக் கண்டு அவர் இறங்கிப் பேசவே நானும் இறங்கி நின்றுகொண்டிருந்தேன். பேசி முடித்தவர் நான் நின்றிருப்பதையே மறந்து ஸ்கூட்டரைக் கிளப்பிக் கொண்டு போய்விட்டார். வீட்டுக்குத் திரும்பிய என் கணவர் ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு ஒன்றும் புரியாமல் திகைத்திருக்கிறார். பிறகு ஒருவாறு விஷயம் புரிந்து, 'கடை வீதியில் கைவிட்ட காதலி'யைத் திரும்பவும் அழைக்க முகத்தில் அசடு வழிய வந்து சேர்ந்தார். அதுமட்டுமா? பின்னால் நான் இருப்பதாக நினைத்துக் கொண்டு வழியெல்லாம் பேசிக் கொண்டும், நான் பதில் தராததற்காகச் செல்லமாகக் கடிந்து கொண்டும் போனதாக அவர் பிறகு சொன்னதை நினைத்தால் எனக்கு இப்போதும் சிரிப்பு வருகிறது.

சரோஜா பூவலிங்கம், தூத்துக்குடி.

## ஏமாற்றத்துக்குமேல் ஏமாற்றம்!

நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த பொழுது ஒரு நாள் என் நண்பன் எனது அறைக்கு வந்து '''செம்மீன்' நல்ல படம். இன்றே கடைசி நாள். உடனே சென்று பார்'' என்றான். உடனே

தியேட்டருக்கு வந்து டிக்கெட் கவுண்டர் அருகில் டிக்கெட் வாங்கப் பையில் கைவிட்ட பொழுதுதான் தெரிந்தது, பணத்தைப் பெட்டியிலிருந்து எடுத்து வர மறந்து விட்டேன் என்பது.

சினிமா ஆரம்பிக்க நேரம் இருந்ததால் உடனே ஒரு வாடகை சைக்கிள் எடுத்துக் கொண்டு என் அறைக்கு வந்து பூட்டைத் திறக்கப் பையில் கைவிட்டேன். நெஞ்சு பகீரென்றது. அறைச் சாவியைக் காணோம். அப்பொழுதுதான் ஞாபகம் வந்தது. சாவியைச் சைக்கிள் கடையில், கையெழுத்துப் போட்டுச் சைக்கிள் வாங்கும்பொழுது அங்குள்ள ஒரு மேஜையில் வைத்தது.

மறுபடியும் விடாமுயற்சியோடு சைக்கிள் கடைக்கு வந்து சாவியை எடுத்துக் கொண்டு அறைக்குத் திரும்பினேன். பெட்டியிலிருந்து பணத்தை மிகவும் கவனமாக எடுத்துப் பையில் வைத்துக் கொண்டு அறையைப் பூட்டிவிட்டு ஞாபகமாகச் சைக்கிளைச் சைக்கிள் கடையில் வைத்துவிட்டு, தியேட்டரை நோக்கி ஓடினேன். 'டிக்கெட்' வாங்கிக் கொண்டு, என் இருக்கையில் அமர்ந்தபொழுது படம் ஆரம்பமாயிருந்தது. திரையில் "வீர பாண்டிய கட்டபொம்மன்" என்ற தலைப்பு முதலில் காட்டப்பட்டது. வெட்கத்தைவிட்டுப் பக்கத்தில் இருந்தவரிடம் மெதுவாகச் " 'செம்மீன்' போய்விட்டதா?" என்று கேட்டேன். அவர் அமைதியாகச் 'செம்மீன்' இங்கேயா நடக்கிறது! அந்தத் தியேட்டரில் அல்லவா நடக்கிறது?" என்று இன்னொரு தியேட்டரின் பெயரைச் சொன்னார். என் ஞாபகமறதியை எண்ணித் தலையில் அடித்துக் கொண்டு பாதியில் எழுந்து அறைக்குத் திரும்பினேன்.

கே. கே. ராஜன், ராமநாதபுரம்

## சைக்கிள் திருட்டு !

கூட்டுறவுச் சங்கப் பணத்தை அறந்தாங்கி கூட்டுறவு மத்திய வங்கியில் சைக்கிளில் போய்ச் செலுத்தி விட்டு அவசரமாக சைக்கிளில் மஞ்சக்கரைக் காடு என்னுமிடத்தில் வந்து கொண்டிருக்கும்போது 'விடாதே பிடி' என்ற சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். பத்துப் பதினைந்து பேர்கள் சத்தம் போட்டுக் கொண்டு என்னைத் தொடர்ந்து ஓடி வந்து கொண்டிருந்தார்கள்.

என்னைத் திருடர்கள்தான் விரட்டுகிறார்கள் என்று பயந்து, அதிவேகமாகச் சைக்கிளைச் செலுத்திக் கொண்டு பறந்தேன். அடுத்த கிராமத்தை யடைந்து திருடர்கள் என்னை விரட்டிக் கொண்டு வருகிறார்கள் என்று அவசரம் அவசரமாக நான் சொன்னவுடன் அங்கு கூடியிருந்தவர்கள் எதிர்ப்புக்குத் தயாரானார்கள், ஆளுக்கொரு கொம்பும் கழியும் எடுத்துக்கொண்டு.

கடைசியில் நடந்தது இதுதான்: 'பேங்கில் வைத்திருந்த என் சைக்கிளை இவர் திருட்டுத்தனமாக எடுத்துக் கொண்டு ஓடி வந்தார்' என்று துரத்தி வந்தவர்களில் ஒருவர் சொன்னார். நான் வைத்திருந்த சைக்கிளைப் பார்த்தேன். அது என்னுடைய சைக்கிள் இல்லை. என்னுடைய சைக்கிள் என்னை விரட்டி வந்தவர்களில் ஒருவருடைய கையில் இருந்தது. என்னத்தைச் சொல்ல !

மா. இலக்குவன், ஆயிங்குடி

## யஜமானர் எங்கே ?

என் தந்தையின் நண்பர் ஒருவர் ஒருமுறை வீட்டுக்கு வந்தார். இருவரும் பேசிக் கொண்டிருந்தனர். பக்கத்து அறையில் டெலிபோன் அடிக்கவே என் தந்தை எழுந்து போய் 'போன்' பேசிவிட்டு அருகேயிருந்த மாடிப் படியின் வழியே மேலே ஏறிச் சென்றுவிட்டார். ஏதோ புத்தகம் அகப்படவும் கீழே நண்பர் காத்திருப்பதையே மறந்துவிட்டார். கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் காத்திருந்த அந்த நண்பர் வேலைக்காரனைக் கூப்பிட்டு, "உன் யஜமானர் என்ன ஆனார் என்று பார்த்து வா" என்று அனுப்பினார். அவன் போய் என் தந்தையிடம் சொன்னதும்தான் அவருக்கு நண்பரின் ஞாபகம் வந்தது. அவர் மாடிப் படியிலிருந்து இறங்கிய வேகத்தைப் பார்க்க வேண்டுமே?

ஸ்ரீமதி பானுசந்திரன், சென்னை - 20

## அண்ணனும் தம்பியும் !

ஒரு நாள் ஆபீஸில் இடைவேளையின்போது டிபன் பொட்டலத்தைக் காலி செய்தபிறகு கை கழுவக் குளியலறைக்குச் சென்றேன். 'டணால்' என்ற சத்தம் கேட்ட பிறகுதான் உணர்ந்தேன்: தொட்டியில் இலையை எறிவதற்குப் பதில் கையிலிருந்த கண்ணாடித் தம்ளரை எறிந்துவிட்டு வாஷ் பேஸினில் இலையை நீட்டிக் கொண்டிருக்கிறேன்!

என்னைவிட என் அண்ணனுக்கு ஞாபக மறதி அதிகம். ஒரு நாள் அவன் மாடியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தான். 'ஆபீசுக்குப் போக நேரமாகவில்லையா?' என்று நான் கேட்டதற்கு அவன், 'ஆபீசுக்குத்தானே போய்க் கொண்டிருக்கிறேன்' என்றான். எனக்குச் சிரிப்பு தாங்கவில்லை. ஏனெனில் அவன் சலவை ஷர்ட் போட்டிருந்தான். ஆனால் இடுப்பில் வெறும் துண்டுதான் சுற்றிக்கொண்டிருந்தான். பேண்ட் மாட்டிக் கொள்ளாமல் ஆபீசுக்குக் கிளம்பி விட்டான்!

இ. ஸ்ரீதர், சென்னை—33








**ம**ணி மிகவும் புத்திசாலி, கெட்டிக்காரன். தன்சொந்தச் சாமர்த்தியத்தாலேயே கல்வியை வளர்த்துக் கொண்டான். பிறந்ததிலிருந்து மணி ஆராய்ச்சி மனம் படைத்திருந்தான். பிறந்த சில நாட்களுக்குள், பால் பாட்டில், அதிலிருந்த ரப்பர் எல்லாவற்றையும் பிய்த்துப் பிய்த்து ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தான். ஏழெட்டு வயதில் கையில் அகப்பட்ட விளையாட்டுச் சாமான்களை, பொம்மை முதலிய எந்தப் பொருளையும் பிய்த்து ஆராய்ந்து பார்க்காவிட்டால் அவனுக்குத் தூக்கம் வராது. புத்தகங்களைப் பிடித்துக் கிழிக்காவிட்டாலும், படிக்காமலே அவற்றைப் பக்கம் பக்கமாகப் பிய்த்து ஆராய்ந்தான்.

வெகு நாட்களுக்குப் பிறகு அவனைச் சந்தித்ததில் எனக்குப் பரம சந்தோஷம்.

மணி என்னைப் பார்த்ததும், ஓடி வந்து, ''ஹலோ, பரத்! எப்படி இருக்கிறாய்!'' என்று கேட்டு என் முதுகில் ஓங்கித் தட்டினான். ''நான் என் புது ஆராய்ச்சியில் மனிதன் மறைந்து போவதற்கு ஒரு ரகசிய ரசாயனத்தை ஆராய்ச்சி செய்து வருகிறேன்.....'' என்றான்.

'' மறைந்து போவதற்கு மருந்தா ?'' எனக்கு ஒரே ஆச்சரியம்.

**ப**ல மாதங்களுக்குப் பிறகு மணி திடீரென்று ஒரு நாள் வந்து தோன்றினான். ''என்ன மணி! உன் ஆராய்ச்சி முற்றிலும் வெற்றி பெற்று விட்டதென்று அல்லவா நினைத்தேன். நீ எங்கே மாயமாய் மறைந்து விட்டாய்?'' என்று கேட்டேன்.

''அதை ஏன் கேட்கிறாய்? என் ஆராய்ச்சி நூற்றுக்குத் தொண்ணூறு வெற்றி பெற்று விட்டது. கடைசிக் கட்டத்தில் அபூர்வப் பொருள் ஒன்று தேவையாயிருந்தது....... அந்த மூலிகை இமயமலைச் சாரலில் இருக்கிறது என்று தெரிந்து அதைத் தேட இமயமலைக்குப் போனேன். சாரல்கள், குன்றுகள், சிகரங்கள் ஒன்றுவிடாமல் தேடினேன், தேடினேன், அப்படித் தேடினேன். எவரெஸ்டையும் தாண்டி எவரெஸ்டுக்கு அப்பால் மானஸரோவரர் தடாகத்தைச் சுற்றியும் தேடினேன்......''





''மானஸரோவரத்தையா ? அது திபெத் பக்கமில்லையா ? உன்னைச் சைனாக்காரன் எப்படி விட்டான் ?'' என்று கேட்டேன்.

'' சரியாப் போச்சு! அங்கிருந்து சீனா சென்று மாவோவைக் கூடச் சந்தித்தேனே. அங்கேயும் அந்த முக்கியமான மூலிகை கிடைக்காததால் மிகவும் ஏமாற்றத்துடன் நம் நாடு திரும்பி வந்துவிட்டேன். நம் நாடு திரும்பியதும், அதுவும் நம் ஊர் வந்ததும் ஒரு படி அரிசி ஆறு ரூபாய் விலை என்று கேட்டதும் பகீர் என்றது. இதற்கு ஏதாவது பரிகாரம் செய்ய வேண்டும் என்று இங்குள்ள அதிகாரிகள் என் கழுத்தைப் பிடித்துக் கொண்டு தொங்கினார்கள்! எனவே அரிசிக்கு மாற்று கண்டுபிடிக்கத் திட்டமிட்டிருக்கிறேன்'' என்றான் மணி.

பிறகு பல மாதங்கள் மணி ஓசையையே காணோம். ஒரு நாள் மீண்டும் திடீரென்று பிரசன்னமானான்.

''நான் முன்னோடி ஆராய்ச்சியில் வெற்றி அடைந்தேன். ஆனால் அதைத் தொடர்ந்து பயன்படுத்தி, போலி அரிசி பெரிதளவில் தயாரிக்க ஏராளமான மைதா முதலிய மாவுகள் தேவை. அவை கிடைப்பது அரிதாக இருக்கிறது. அரசாங்கத்தாரிடம் கேட்டால் அவர்கள் கையை விரிக்கிறார்கள்'' என்றான்.

இன்னும் சில மாதங்களுக்குப் பிறகு மணி வந்த போது மீண்டும் ஆவலுடன் அவனை வர வேற்று, ''என்ன, மணி ! நல்ல செய்தி கொண்டு வந்திருக்கிறாயா ?'' என்று கேட்டேன்.

''பேஷான செய்தி! தமிழக அரசின் பால் வழங்கு துறை பால் விலையை எக்கச்சக்கமாக உயர்த்தி விட்டதாமே ? ஆனால் அதுபற்றி யாரும் கவலைப்பட வேண்டாம் ! நல்ல பாலுக்கு அடிப்படை மூலாதாரப் பொருள் புல்தான். அந்தப் புல் நம் நாட்டில் ஏராள மாகக் கிடைக்கிறது. காசில்லாமல் கிடைக் கிறது. மாட்டைப் புல் மேயவிட்டு மாட்டி லிருந்து பால் கறந்து எடுப்பதைவிட, புல்லி லிருந்தே பாலை நேரில் எடுத்துவிட்டால்!'' என்றான் மணி.

இதைக் கேட்டதும் என் மனக்கண் முன்னால் ரசகுல்லா, குலாப்ஜாமூன், திரட்டுப்பால், பால் கோவா, பால்போளி, ரஸமலாய், மில்க்ஷேக் முதலிய பல பொருள்கள் நர்த் தனமாடின. என் வறண்ட நாக்கில் ஜலம் ஊறிற்று; சப்புக் கொட்டினேன்.

''நிஜமாகவா? இதெல்லாம் முடியுமா ?'' என்றேன்.

''சந்தேகம் இருந்தால் என் புல் பண்ணைக்கு வந்து பாரேன்'' என்றான் மணி.

''அவசியம் வருகிறேன்'' என்று வாக்குறுதி கொடுத்துவிட்டு அதை நிறைவேற்றினேன். ஒரு விடுமுறை நாளன்று அவன் கொடுத்த விலாசத்துக்குச் சென்றேன்.

எங்கேயோ சந்துபொந்தெல்லாம் தாண்டி ஒரு மூலையில், முள் வேலி போட் டிருந்த ஒரு சிறிய வயலுக்கு நடுவில் ஒரு குடிசை. அதைச் சுற்றி ஏதோ நாணல் போல் விதம் விதமான புல்கள் வளர்ந்தி ருந்தன..... மூங்கில் பத்தைகளால் செய் யப்பட்ட நுழை கதவைத் திறந்து கொண்டு குடிசையை அடைந்தேன். குடிசைக் கதவு திறந்திருந்தது. குரல் கொடுத்துப் பார்த் தேன்..... பேச்சு மூச்சுக் காணோம். உள்ளே நுழைந்து, ''மணி, மணி'' என்று கூப்பிட் டேன். பதில் இல்லை. வெளியில் வந்து சுற்று முற்றும் தேடினேன். பின்புறத்தில் வேலி அருகில் ஒரு புல் புதருக்கிடையில் ஓர் உருவம் தெரிந்தது.

''மணி!'' என்று தாவி அங்கு ஓடினேன்.

குனிந்து கொண்டு புல் புதருக்குள் தலையை விட்டுக் கொண்டிருந்த உருவம் தலையை வெளியில் கொண்டு வந்தது. மணிதான்! சந்தேகமில்லை. அவன் வாயில் ஒரு கற்றைப் புல்.... அதைச் சுவைத்துக் கொண்டிருந் தான்.

''மணி! என்ன இது! புல் மேய்கிறாயா ?'' என்று கேட்டேன்.

அவன் ஓர் அசட்டுச் சிரிப்புடன், சுவைத்த புல்லை விழுங்கிவிட்டு, சுவைக்காத பாக்கி யைத் துப்பிவிட்டு, ''ஹலோ! வா! வா! என்ன, ஏது இப்படி...?'' என்று கேட்டான்.

''நீ வரச் சொன்னாயே ! வந்தேன். எங்கே உன் புல் பால்?'' என்று ஆவலுடன் கேட் டேன்.

''அவசரப்பட்டால் முடியுமா ? புல்லே, புல்லே! பால் கொடு என்றால் கொடுக்குமா? இப்போதுதான் முன் ஆராய்ச்சி செய்கிறேன். ஒவ்வொரு புல்லையும் 'டெஸ்ட்' செய்து கொண்டிருக்கிறேன்'' என்றான்.

புல் பால் எப்போது கிடைக்கும் என்று நானும் ஆவலாக எதிர்பார்த்துக் கொண் டிருக்கிறேன். என் கவலை எல்லாம், புல்பால் ஆராய்ச்சி முடிவ தற்குள், மணிக் குக் கொம்பு முளைத்து, அல்லது காதுகளாவது நீண்டு பால்இரண்டு வரும் சமயத்தில் தாழி உதைத்து உடையாமல்இருக்க வேண்டுமே என்பது தான்....!










அழகிய அந்தப் பங்களா முன் வந்து நின்ற காரிலிருந்து சொகுசாக இறங்கினாள் நிர்மலா.

''கார்த்தி! உள்ளே வாங்களேன்!'' உடன் வந்த இளைஞனை உள்ளே அழைத்துச் சென்றாள்.

விசாலமான அந்த ஹாலை விதம் விதமான நாற்காலிகள் அலங்கரித்தன. வெளிர்ப்பச்சை வண்ணம் பூசப்பெற்ற சுவர்கள். மெத் தென்ற விரிப்புக்கள்.

கார்த்தி கனவு உலகில் நடப்பது போல் உணர்ந்தான்.

மாடியிலிருந்து இறங்கி வந்த ராஜ சேகர் சோபாவில் தன் பெண் அருகில் உட் கார்ந்திருந்த இளைஞனைப் புன்முறுவலுடன் வரவேற்றார்.

''அப்பா, இவர்தான் மிஸ்டர் கார்த்தி.''

சோழவரம் போனபோது ஆன அறிமுகம். சண்டி செய்த காரை நிமிடத்தில் சரி செய்த கார்த்தியை அவளால் மறக்க முடியவில்லை.

செல்லப் பெண். ராஜசேகரின் ஒரே மகள். அவனை அறிமுகப்படுத்த அழைத்து வந்து விட்டாள்.

தக்க சமயத்தில் உதவியதற்கு நன்றி தெரி வித்துவிட்டு ராஜசேகர் சிறிது வேலை இருப்ப தாகச் சொல்லி எழுந்தார்.

''நம் வீட்டைச் சுற்றிக் காட்டப் போகி றேன், அப்பா!'' நிர்மலா குழந்தையைப் போல் துள்ளி எழுந்து நின்றாள்.

''சரி, நிம்மி! நான் என் ரூமுக்குப் போகிறேன். மிஸ்டர் கார்த்தி, ஆட்சேபனை இல்லையே? ஒரு டிரங்க்காலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்!''

கார்த்தி புன்னகை பூத்துத் தலையை ஆட்டினான்.

''கேட்க மறந்துவிட்டேனே. நீங்கள் எங்கே வேலையாக இருக் கிறீர்கள், மிஸ்டர் கார்த்தி?''

''CBI''ல் என்று நிர்மலா நிதானமாகச் சொன்னாள்.

''என்ன, CBIயிலா?'' ராஜ சேகரனின் குரல் தடுமாறியது.

''ஆமாம்பா.... சமீபத்தில் தான் சென்னைக்கு மாற்றல் ஆச் சாம்.... அதோ டெலிபோன் மணி கேட்கிறது. உங்கள் டில்லி கால் என்று நினைக்கிறேன்.''

ராஜசேகரின் நடையில் இருந்த கம்பீரம் கணிசமாகக் குறைந் திருந்தது.

* * *

''எப்படி எங்கள் அரண் மனை?'' நிம்மி கன்னம் குழியக் கேட்டாள்.

''பிரமாதம். அரண்மனையை விட ராஜகுமாரி படு பிரமா தம்.''

கலகலவெனச் சிரித்தாள் நிம்மி.

''நிம்மி, உன்னை ஒன்று கேட்கலாமா?''

''ம்.... ஓ எஸ்......''

''திடீரென்று உங்க அப்பா ஏன் ஒரு மாதிரி ஆகிவிட்டார்?''

''அதுவா? ஒன்றுமில்லையே!'' என்று நிம்மி பேச்சை மாற்றினாள்.

* * *

ரொட்டியில் வெண்ணெய் தடவிப் பீங்கான் தட்டில் வைத்தாள் நிம்மி.

''ரொம்பப் பயந்து விட்டீர்களா, அப்பா?''

''ம்.....ம்... என்ன சொன்னே?'' ராஜசேகர் திடுக்கிட்டுத் திரும்பினார்.

''கார்த்தி CBIயில் வேலை செய்கிறார் என்று சொன்ன உடன் Central Bureau of Investigation என்று நினைத்துப் பயந்து போனது நிஜம்தானே?''

ராஜசேகர் பதில் பேசவில்லை.

''அப்பா உங்களைப் பார்த்தாலே பரிதாப மாக இருக்கு அப்பா. CBI என்றால் சென்ட்ரல் பாங்க் ஆஃப் இந்தியா என்று இருக்கக் கூடாதா? அவர் அதில் அதிகாரி அப்பா! 'அரண்டவன் கண்ணுக்கு இருண்ட தெல்லாம் பயம்'னு சும்மாவா சொல் கிறார்கள்!''

நிர்மலாவின் சிரிப்பில் கேலி அல்ல, சோகம் தான் இழைந்தோடியது!

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# நாட்டிலுள்ள செயல்திறனை மேலும் சீராக்கி நாட்டின் வளத்தை மேம்படுத்துவதையே தனது குறிக்கோளாகக் கொள்வதன்றோ ஒருவரது மேதாவிலாசத்திற்குச் சான்று!



பல ஆண்டுகளுக்கு முன்பே—அதாவது 1890லேயே இந்தியாவின் ஏழ்மை நிலைக்குக் காரணம் வாய்ப்பின்மை என்பதை ஜெம்ஷேட்ஜீ டாடா உணர்ந்தார்.

அவ்வாய்ப்புகளை அளிப்பதற்கென்றே 1921ல் ஜெம்ஷேட்பூர் டெக்னிகல் இன்ஸ்டிட்யூட் துவங்கப் பட்டது. கடந்த ஐம்பத்து மூன்று ஆண்டுகளாக நாட்டின் நற்பணிக்காக மிகச் சிறந்த எஃகுத்துறை நிபுணர்கள், தலைசிறந்த இந்தியத் தொழில்நுட்ப அதிகாரிகள், என்ஜினீயர்கள் மற்றும் டெக்னீஷியன்கள் இங்கு பயிற்சி பெற்றுள்ளனர். இவர்கள் இந்தியாவின் பொதுத் துறையிலுள்ள நிறுவனங்களாகிய ஹிந்துஸ்தான் ஸ்டீல், பொகாரோ ஸ்டீல் மற்றும் ஹெவி என்ஜினீயரிங் கார்ப்பொரேஷன் இவற்றிலும் டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனியிலும் பணி புரிகின்றனர்.




டாடா ஸ்டீல்

HT-TIS-7354 A

